


# விஜய பிரதாபன்

சிங்கீதம் சீனிவாசராவ்     B.வெங்கட்ராமரெட்டி

# மங்கை

ஜூலை '94

- ஆவுடையார் கோயில் - ரமணி
- சமையலறையே சிறந்த பியூட்டி பார்லர்
  -டாக்டர் கமலி ஸ்ரீபால்
- மனிதாபிமானம் தந்த மகிழ்ச்சி -விமலா ரமணி
- சிறப்புச் சிறுகதை -இருகூரான்
- சித்த மருத்துவ கேள்வி பதில்
- மாம்பழ சமையல், முகம் பளபளப்பாக இருக்க அழகுக் குறிப்புகள்
- காய்கறிகள் தொக்கு பச்சடி வகைகள்
- குடும்ப நலனில் உறவினர்களின் பங்கு
  -கலந்துரையாடல்
- மங்கை புதிர் - பரிசு ரூ250/-
- ஏராளமான வீட்டுக்குறிப்புகள், மருத்துவ ஆலோசனைகள்
- ஸ்ரீஜயேந்திரர் பதில்கள்

விலை ரூ.6/-




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## கல்வித் துறையில் புரட்சியா!

சீனாவில் பள்ளிக்குத் தம் குழந்தைகளைப் படிக்க அனுப்பாதிருந்தால் பெற்றோர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்ற ஒரு செய்தியை நாம் முன் இதழ் ஒன்றில் வெளியிட்டிருந்தோம். இதனால்தானோ என்னவோ நம் நாட்டில் சில மாநிலங்கள் இதுபோன்ற நடவடிக்கை எடுக்க யோசித்து வருகின்றன.

சுதந்திர இந்தியாவிற்கான சட்டங்களை வகுத்த அரசியல் நிர்ணயசபை குழந்தைகளுக்கு இலவசக் கல்வி என்ற உரிமையைப் புகுத்த நினைத்தது. ஆனால் பல காரணங்களால் கட்டாயக் கல்வி என்று மாற்றப்பட்டது. குழந்தைகள் தம் பெற்றோரை விட்டுப் பிரிந்து இருக்க முடியாது. அவர்களுக்கு உதவியாகத் தொழிலிலும் இருப்பார்கள் என்பதே இதன் காரணமாம். மேலும் பெற்றோர்களும் கல்வி அளிக்கச் சக்தியற்றவர்களாகவும் இருக்கிறார்கள். சிறுவர்களும் பெற்றோர்களோடு சேர்ந்து போய் பணம் சம்பாதிக்க வேண்டிய நிலையும் உள்ளது.

அண்மையில் மத்திய, மாநில அரசுகள் பள்ளிக்குக் கணிச அளவில் குழந்தைகள் வராமல் போவது கண்டு குழந்தைகள் வேலை செய்வதைத் தடை செய்யும் சட்டம் இயற்றவும் குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வியை நடைமுறையில் கொண்டுவரவும் யோசித்து வருகின்றன.

இதையெல்லாம் பார்க்கும் போது கல்வித் துறையில் புரட்சி ஏற்படுகிறது என்றுதானே தெரிகிறது!



மதிமுகம் : 95 ஜூலை 1994 புன்னகை : 1

தனிப்பிரதி : ரூ. 4.00 வருட சந்தா : ரூ. 48.00



செய்திகளும் தகவல்களும்

# தென்னாப்பிரிக்காவின் புது அமைப்பு



நெல்சன் மண்டேலா மே 15-ல் தென் ஆப்பிரிக்கக் குடியரசுத் தலைவர் பதவியை ஏற்ற போது "தென்னாப்பிரிக்கக் குடியரசிற்கு விசுவாசமாக இருப்பதாகப் பிரமாணம் செய்கிறேன்" என்று கூறினார். அதற்கு முந்தைய தினம் நடந்த அந்நாட்டுப் புதிய நாடாளுமன்றத்தின் முதல் கூட்டத்தில் அவர் நாட்டின் குடியரசுத் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவ்வாறு அவர் தென்னாப்பிரிக்கக் குடியரசின் முதல் கருப்பர் இனத் தலைவரானார்.

தென்னாப்பிரிக்காவில் உள்ள தங்கம், மற்றும் பல தாதுப் பொருள்களால் கவரப்பட்டு ஐரோப்பியர்கள் அந்நாட்டிற்கு வந்து அங்குள்ள கருப்பர்களை அடக்கி ஒடுக்கலானார்கள். டச்சு, கிழக்கிந்தியக் கம்பெனி, கேப்டவுனுக்கு வந்து அதைக் குடியேற்ற நாடாக்கி அங்கிருந்த கருப்பர்களை உள் நாட்டிற்குள் விரட்டியது. அரபிக் கடல், இந்து மகாசமுத்திரம், அட்லாண்டிக் மகா சமுத்திரம் ஆகியவற்றில் சென்று வரும் கப்பல்கள் தென்னாப்பிரிக்காவின் நன்னம்பிக்கை முனை வழியேதான் சென்றாக வேண்டும். அதனால் அப்பகுதி வியாபார மையமாகியது. அடுத்த நூறு ஆண்டுகளில் பிரிட்டன் அப்பகுதியில் தன் காலை ஊன்றிவிட்டது.

அப்பகுதியில் குடியேறிய வெள்ளையர்கள் கருப்பர்களை அங்கிருந்து விரட்டினார்கள். அவர்கள் குறிப்பிட்ட இடங்களைத் தாண்டி வரக்கூடாதெனக் கட்டுப்பாடு செய்தார்கள். வியாபார இடங்களிலும், மருத்துவமனைகளிலும், கல்விக் கூடங்களிலும் கருப்பர்களுக்கு இடம் அளிக்கவில்லை. கருப்பர்கள் தம் நாட்டிலேயே தம் உரிமைகளை இழந்தனர். சிறுபான்மையினரான வெள்ளையர்கள் தம் அதிகாரத்தை நிலை நிறுத்த இனப்பாகுபாட்டுக் கொள்கையைக் கடைப்பிடிக்கலானார்கள்.

இந்த இனவெறிக் கொள்கையால் அங்கு சென்ற இந்தியர்களும் பாதிக்கப்பட்டனர். அப்போது இங்கிலாந்தில் பாரிஸ்டர் படிப்பை முடித்து தென்னாப்பிரிக்காவிற்கு வழக்கறிஞராகச் சென்ற மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியை அந்நாட்டு ரயிலில் வெள்ளையர் முதல் வகுப்பில் பயணம் செய்யவிடாது வெளியேற்றிய நிகழ்ச்சி யாவருக்கும் தெரிந்ததே. இதற்குக் காரணம் அவர் வெள்ளையர் அல்ல என்பதே. இந்த இனவெறிக் கொள்கையை எதிர்த்து காந்திஜீ நேடால் இந்தியக் காங்கிரசை நிறுவி அஹிம்சை அடிப்படையில் போராட்டம் நடத்தினார்.

இந்த சத்தியாக்கிரகப் போராட்டம் நெல்சன் மண்டேலாவுக்கு ஊக்கமளித்தது. அவர்




ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் வாயிலாகக் கருப்பர்களின் உரிமைகளுக்காகப் போராட்டம் ஆரம்பித்தார். 1948-ல் இனவெறிச் சட்டம் நிறைவேற்றப்படவே மண்டேலா போராட்டத்தை தீவிரமாக்கினார். 1952-ல் மண்டேலா கைது செய்யப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார். ஆனால் அவரது ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தியது.

டிகிளார்க் 1989-ல் தென்னாப்பிரிக்கக் குடியரசுத் தலைவரானதும் இனவெறிக் கொள்கை பற்றிச் சிந்திக்கலானார். உலகின் பல நாடுகள் தென்னாப்பிரிக்கா மனித உரிமைகளை மீறுகிறது எனக் கூறி தடைகள் விதித்து தொடர்புகளையும் துண்டித்துக் கொண்டன. தென்னாப்பிரிக்காவில் நடக்கும் கிரிக்கெட் போட்டிகளுக்கும் எந்த நாடும் தன் விளையாட்டு வீரர்களை அனுப்பவில்லை. தம் நாடுகளில் நடக்கும் போட்டிகளிலும் அவை தென்னாப்பிரிக்க விளையாட்டு வீரர்கள் கலந்து கொள்ள அனுமதிக்கவில்லை. ஒலிம்பிக் போட்டிகளில் தென்னாப்பிரிக்கா கலந்து கொள்ள முடியவில்லை.

டிகிளார்க் இனப்பாகுபாடு சட்டத்தை ரத்து செய்யத் தீர்மானித்து அதன் முதல் நடவடிக்கையாக நெல்சன் மண்டேலாவை விடுதலை செய்தார். இதனால் மண்டேலா வெள்ளையர்களுடனும் ஜுலுஸ் போன்ற கருப்பர் இன அமைப்புகளுடனும் பேச்சுவார்த்தைகள் நடத்தி புதிய நாடாளுமன்றத்தைத் தேர்ந்தெடுக்க கறுப்பர், வெள்ளையர் ஆகிய அனைவருக்கும் வாக்குரிமை கிடைக்கச் செய்தார். இதன்படி பல உலக நாடுகளின் பார்வையாளர்கள் முன்னிலையில் பாரபட்சமற்ற தேர்தல் நடைபெற்று புதிய நாடாளுமன்றம் கூடியது.

இத்தேர்தலில் ஆப்பிரிக்க தேசிய காங்கிரசிற்கு 62 சத வாக்குகள் கிடைத்தன. நெல்சன் மண்டேலா ஒரு மனதாகக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தம் கட்சியைச் சேர்ந்த ஒருவரையும், டிகிளார்க்கையும் துணைத் தலைவர்களாக நியமித்தார். 39 அமைச்சர்களடங்கிய அமைச்சரவையில் நால்வர் இந்தியர்கள். இந்திய வம்சத்தவரான ஒரு பெண்மணி தாம் நாடாளும் மன்றத்திற்குத் தலைமை வகிக்கும் அதிபராக (ஸ்பீக்கர்) தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

நெல்சன் மண்டேலா தம் தொடக்க உரையில் "மனதில் எவ்வித பயமும் இல்லாமல், மனிதத் தன்மையை நிலைநிறுத்தும் வகையில் வெள்ளையர்களும் கருப்பர்களும் சம உரிமைகளுடன் கௌரவமாக வாழும் தென்னாப்பிரிக்காவை உருவாக்கவே நான் முயன்று வருவேன்" எனக் கூறினார்.

உலகப் புகழ்பெற்ற இந்த அரசியல் கைதி தனக்கு ஊக்கமளித்துத் தன் போராட்டத்தில் வெற்றிகாணச் செய்த காந்தியக் கொள்கையை என்றும் மறக்க மாட்டார் என நம்புவோமாக.



# பணத்தின் மதிப்பு

முத்தைய்யா வட்டிக்கடை நடத்துபவன். தன்னிடம் கடன் வாங்க வந்தவர்களிடம் அன்புடன் பேசிப் பணம் கொடுப்பான். அதனால் அவன் கொடுத்த கடனும் சிரமமில்லாமல் அவனுக்குக் கிடைத்தும் வந்தது.

அவனிடம் கடன் வாங்க வருவோரின் எண்ணிக்கை பெருகவே அவன் தன் உதவியாளர்களாக நால்வரை நியமித்துக் கொண்டான். அவனது கடை நன்கு நடந்து வந்தது. இதைக் கண்ட அருணாசலம் என்பவன் மனதில் தானும் முத்தைய்யாவைப் போல வட்டிக் கடை நடத்திப் பெயர்பெற வேண்டும் என்ற ஆசை எழுந்தது.

அதற்கு என்ன செய்யலாம் என்று அவன் யோசிக்கலானான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. முத்தைய்யா நூற்றுக்கு ஆண்டிற்குப் பதினைந்து என்று வட்டி வாங்கி வந்தான். தான் நூற்றுக்கு ஏழரை என்று வட்டி வாங்கினால் தன் வியாபாரம் அமோக நடக்கும் என்று அவன் எண்ணினான்.

அருணாசலம் தான் புதிதாக வட்டிக்கடை வைக்கப் போவது பற்றித் தன் மனைவியிடம் கூறினான். அவள் அவனை விட புத்திசாலி. அவள் சற்று யோசித்து விட்டு "நீங்கள் அவசரப்பட்டு யாருக்கும் கடன் கொடுத்து விடாதீர்கள். அது லேசில் திரும்பி வராது. நமக்குப் பண நஷ்டமே ஏற்படும். முத்தைய்யாவின் வட்டி அதிகமாக இருந்தும் கடன் வாங்கிப் போவரின் எண்ணிக்கை குறைவயவில்லை. மேலும் அவர் கொடுத்த எல்லாக் கடனுமா விரைவில் வசூலாகி விடுகிறது? நீங்கள் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்தால் எல்லோரும் வாங்கிக் கொண்டு

- சிவனார் செல்வன் -



போய் விடுவார்க்ள். ஆனால் பணம் லேசில் திரும்பி வராது. இதனால் நமக்குப் பண நஷ்டத்தோடு முத்தைய் யாவின் மன ஸ்தாபத்திற்கும் ஆளாக வேண்டி வரும்" அவர் நமக்கு தூரத்து உறவினரும் ஆவார். மிகவும் நல்லவர். நீங்கள் புதுக்கடை ஆரம்பிக் கப் போவது பற்றி அவரிடம் யோசனை கேளுங்கள். கண்டிப்பாக உங்களுக்கு அவர் ஏதாவது ஒரு வழி சொல்லுவார்" என்றாள்.

அருணாசலமும் தன் மனைவி கூறியபடி முத்தைய்யாவைச் சந் தித்து தான் வட்டிக் கடை வைக்கப் போவது பற்றி விவரமாகக் கூறி னான். முத்தைய்யாவும் முழுவதை யும் கேட்டு விட்டு "நீ என்னிடம் வந் தது நல்லதாய்ப் போயிற்று. வட்டிக் கடையை யார் வேண்டுமானாலும் நடத்திவிட முடியாது. இது கத்தி முனையில் நடப்பது போல. அதன் நெளிவு சுளிவுகளை நான் நன்கு அறிவேன். நானே என் வியாபா ரத்தை விரிவுபடுத்த எண்ணி இருக் கிறேன். அதற்கு எனக்குப் பணம் தேவைப்படுகிறது. நீ கடையை ஆரம் பித்து ஏழரை வட்டிக்குக் கடன் கொடுக்கப் போவதாகச் சொல் கிறாய். நீ முதலாகப் போடப் போகும் பணத்தை எனக்குக் கடனாகக்கொடு. நான் நூற்றுக்குப் பத்து ரூபாயாக வட்டி உனக்குக் கொடுக்கிறேன். ஆனால் நீ கொடுக்கும் பணத்தை ஐந்து வருடங்களுக்குப் பிறகு தான் கொடுப்பேன்" என்றான்.

அருணாசலத்திற்கு இது சரியான தாகவே பட்டது. உட்கார்ந்த இடத்தில் நூற்றுக்குப் பத்து வட்டியாகக் கிடைக் கிறதே. ஆனால் தன் முதல் ஐந்து வருடங்களுக்குப் பிறகுதானே கிடைக் கும். நடுவில் ஏதாவது அவசரச் செலவு வந்தால் என்ன செய்வது?

அருணாசலம் அதை முத்தைய்யா விடம் கூறவே அவனும் "அப்போது உனக்குத் தேவைப்படும் பணத்தை நூற்றுக்குப் பனிரெண்டு என்ற வட்டியில் கடன் கொடுக்கிறேன். இதனால் உனக்குக் கிடைக்கும் பத்து வட்டிப் பணம் கிடைப்பதோடு நீ செலுத்துவது நூற்றுக்கு இரண்டு ரூபாய் என்றாகிவிடும். நீ அந்தக்

கடனை விரைவில் திருப்பிக் கொடுத்து விட்டால் உனக்குத்தான் லாபம்" என்றான்.

அருணாசலமும் யோசித்துச் சொல்வதாகக் கூறிவிட்டுத் தன் வீட்டிற்கு வந்தான். தன் மனைவியிடம் முத்தையா கூறியதைத் தெரிவித்தான். அது கேட்டு அவள் "ரொம்ப நல்லது. நமக்கு வயலிலிருந்தும் வீட்டிலிருந்தும் தேங்காய் விற்றும் பணம் கிடைக்கிறது. அதற்கு வட்டி வரும் என்றால் அதை முதலீடு செய்யலாமே. நாம் கடன் வாங்கித்தான் ஆக வேண்டும் என்ற நிலை வந்தால் முத்தையாவிடம் நூற்றுக்குப் பனிரெண்டு வட்டிக்குக் கடன் வாங்கிக் கொள்ளலாம். எனவே உங்களிடமுள்ள பணத்தைக் கொடுத்து நூற்றுக்குப் பத்து வட்டியாகப் பெற்று வாருங்கள்" என்றாள்.

அருணாசலமும் தன்னிடமிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு போய் முத்தையாவிடம் பத்து சத வட்டிக்குக் கொடுத்து விட்டு வந்தான். அருணாசலத்தின் அண்டை வீட்டுக்காரன் வீராசாமி. அவனிடமும் நிறையப் பணம் இருந்தது. ஆனால் கண்டபடி செலவு செய்பவன். சிறு வயது முதல் தன் நண்பனாக இருக்கும் வீராசாமிக்கு அருணாசலம் அவ்வப்போது கை மாற்றாகப் பணம் கொடுத்து உதவுவதும் உண்டு.

அருணாசலம் தன் பணத்தை எல்லாம் முத்தையாவிடம்



கொடுத்து விட்டதால் வீராசாமி கை மாற்றாகப் பணம் கேட்ட போது கொடுக்க முடியவில்லை. அப்போது அருணாசலம் வீராசாமியிடம் "நீ வீணாகப் பணத்தை செலவு செய்யாதே. உன் பணத்தை முத்தையாவிடம் கொடுத்து வை. பத்து சதவீத வட்டி கிடைக்கும்" என்றான். அவனுக்கு அது பிடிக்கவில்லை. அவனது மனைவியும் "பணத்தை என்ன செய்ய வேண்டும் என்பது அவரவர் இஷ்டம். உங்கள் முறை வேறு இவர் முறை வேறு" என்று கூறினாள்.

வீராசாமிக்கு அந்த முறை வயலில் நல்ல விளைச்சல் கண்டது. அதனால் பணம் நிறையக் கிடைக்க,



வீட்டுச் செலவெல்லாம் போகக் கையில் மூவாயிரம் ரூபாய் மிஞ்சியது. அதைக் கொண்டு ஒரு வைர மாலை வாங்கிக் கொள்ள வீராசாமியின் மனைவி விரும்பினாள். அவளுக்குப் பிடித்த வைரமாலை ஐயாயிரம் ரூபாய் விலையில் இருந்தது.

அப்போது அவள் தன் கணவ னிடம் "நேற்று தான் உங்கள் நண்பர் அருணாசலத்திற்குத் தேங்காய் விற்ற தில் ஐயாயிரம் ரூபாய் வந்தது. நீங் கள் போய்க் கை மாற்றாக இரண்டா யிரம் கேளுங்கள்" என்றாள். வீரா சாமி அருணாசலத்தைக் கண்டு விஷயத்தைக் கூறவே அவனோ "இப் போது வைரமாலை எதற்கு? உன் மூவாயிரத்தை முத்தையாவிடம் கொடு. பத்து சதவீத வட்டியாவது கிடைக்கும்" என்றான்.

வீராசாமியோ "வைரமாலை இல்லை என்றால் என் மனைவி உயிரை விட்டு விடுவாள்" எனவே அருணாசலமும் "நான் என் ஐயா யிரத்தை முத்தையாவிடம் கொடுத்து விட்டு உனக்கு வேண்டிய இரண் டாயிரம் ரூபாயைப் பனிரெண்டு சத வட்டிக்குக் கடனாக வாங்கிக் கொடுக்கிறேன். சரியா?" என்று கேட்டான்.

வீராசாமியோ "வட்டிக்குக் பணமா? நீ கைமாற்றாகக் கொடுப் பாய் என்று கேட்டேன்" என்றான். அருணாசலமும் "உனக்குப் பணம் வேண்டுமென்றால் சொல். இதுதான் ஒரே வழி நான் முத்தையாவிட மிருந்து கடன் வாங்கித் தருகிறேன்" என்றான். வீராசாமியும் அதற்கு இணங்கினான்.

வீராசாமி அருணாசலம் கொடுத்த பணத்தோடு தன் வீட் டிற்குப் போய் நடந்ததைக் கூறினான். அவன் மனைவியோ "உங்கள் சிநே கிதர் உங்களிடமே வட்டி வாங்கு கிறாரா? இப்படி ஒரு நண்பன் வேண்டவே வேண்டாம்" என் றெல்லாம் பொரிந்து தள்ளினாள். ஆனால் வீராசாமி கொண்டு வந்த பணத்தோடு மூவாயிரத்தையும் சேர்த்து வைரமாலை வாங்கிக் கொண்டே விட்டாள்.

வீராசாமியும் அவன் மனைவியும்

கடனுக்கு வட்டி செலுத்த வேண்டுமே என்பதை நினைவில் கொண்டு சிக்கனத்தைக் கடைப்பிடிக்கலானார்கள். ஐந்து மாதத்துள் இரண்டாயிரத்து நூறு ரூபாய் சேர்ந்து விட்டது. அதை எடுத்துக் கொண்டு வீராசாமி அருணாசலத்தின் வீட்டிற்குச் சென்றான். அருணாசலம் பணத்தை எண்ணிப் பார்த்தபிறகு நூறு ரூபாயை அவனுக்குத் திருப்பிக் கொடுத்து "நீ என்னிடம் வாங்கிக் கொண்டது இரண்டாயிரம் தானே" என்றான்.

அப்போது வீராசாமி "அந்த நூறு ரூபாய் ஐந்து மாதத்து வட்டி" என்றான். அப்போது அருணாசலம் "நீ என்னிடம் கை மாற்றாக வாங்கிய பணத்திற்கு நான் வட்டி வாங்குவதா? நான் உனக்குக் கடனா கொடுத்தேன்? இவ்வளவுதானா நீ என்னைப் புரிந்து கொண்டது." என்று கேட்டான்.

வீராசாமியோ "அன்று நீ உன் பணத்தை எல்லாம் முத்தையாவிடம் கொடுத்து விட்டு இரண்டாயிரம் கடன் வாங்கித் தருவதாகத் தானே சொன்னாய்?" என்றான். அருணாசலமும் "ஆமாம். அது நான் வாங்கின கடன். அதற்கான வட்டியை நான் முத்தையாவுக்குக் கொடுத்து விட்டுப் போகிறேன். உனக்குக் கை மாற்றாகத்தானே கொடுத்தேன். அப்போது எனக்கு எப்படிப் பணம் கிடைக்கும் என்பதைத்தான் கூறினேனே ஒழிய உனக்குப் பணம் கடனாகக் கொடுப்பதாகக் கூறவில்லையே. ஆனால் நீ கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமே என நினைத்துச் சிக்கனத்தைக் கடைப் பிடித்தாய். இப்போது உனக்கு பணத்தின் மதிப்பு என்ன என்று தெரிந்திருக்கிறது பார்" என்றான்.

அது கேட்டு வீராசாமி "நீ எனக்கு நல்ல பாடம் கற்பித்தாய். நானும் உன்னைப் போலப் பணத்தை முத்தையாவிடம் விட்டு வைத்து வட்டி வாங்கிக் கொள்கிறேன். சேமிப்பின் மதிப்பை எனக்கு நன்கு உணர்த்தி விட்டாய்" என்றான் அகம் மகிழ.



# ஏன் இந்த முடிவு?

காட்டூர் ஜமீன்தாரர் ஒருமுறை கவிதைப் போட்டி வைத்தார். வெற்றி பெறுப வர் கவியரசர் என்ற பட்டத்தோடு ஆயிரம் வராகன்களையும் பரிசாக அடைவார்.

போட்டி நடந்தது. நடுவர்கள் மதிப்பெண்கள் அளித்ததில் இரு கவிஞர்கள் சம மதிப்பெண்கள் பெற்று முதலிடத்தை அடைந்திருந்தார்கள். ஒருவர் இருபது வய தான இளமாறன். மற்றவர் எழுபது வயதான ஏகாம்பரம்.

இவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு ஜமீன்தாரரிடம் விடப்பட்டது. அவர் சற்று யோசித்து பட்டத்தையும் பணமுடிப்பையும் முதியவரான ஏகாம்பரத்திற்கு அளித்து கௌரவித்து அனுப்பினார்.

எல்லோரும் போன பின் ஜமீன்தாரரிடம் அவரது திவான் "தாங்கள் இளை ஞரை ஊக்குவிக்காமல் முதியவருக்குப் பரிசளித்தது சரியா?" என்று கேட்டார்.

ஜமீன்தாரரும் "அந்த இளைஞன் அடுத்த வருடமோ அல்லது அதற்கு அடுத்த வருடமோ கூடப் போட்டியில் கலந்து கொண்டு முதலாவதாக வரலாம். ஆனால் கிழவர் ஏகாம்பரம் அடுத்த ஆண்டு வரை உயிருடன் இருப்பாரா என்பது சந்தேகமே. எனவேதான் அவர் வாழ்ந்திருக்கும் போதே பரிசு பெறட்டும் என்று அவரைத் தேர்ந்தெடுத்தேன்" என்றார்.






*(கோசல மன்னன் சுசேனனின் ஆருயிர் நண்பன் ஜெயசேனன். அவனது மகள் சக்திசேனையின் திறனைப் பரிசோதிக்க மன்னன் அவளை அரவல்லி மலைப் பகுதிக்குப் போகச் சொல்லி படிப்பை முடித்து விட்டு வரும் கீர்த்தி சிம்மனை வழிமாற்றி அனுப்ப வேண்டும் எனக் கூறினான். அதற்கு கீர்த்தி சேனை ஒப்புக் கொள்ளவே அது கண்டு திகிலடைந்த ஜெயசேனன் மன்னனின் உள்நோக்கம் என்ன என்பதையும் தன் முன்னோர்கள் பற்றியும் விவரமாகக் கூறினான். விசித்திரவர்மனுக்கு ஜெயசேனன் மந்திர சக்தி வாய்ந்த முத்து மாலை ஒன்றை அளித்தான். வேட்டையாடப் போன விசித்திரவர்மனுக்கு ஒரு விக்கிரகம் கிடைக்கவே அது பற்றி சாஸ்திரம் படித்தவர்களிடம் யோசனை கேட்கத் தலைநகருக்கு வந்தான். பிறகு—)*

மன்னன் விசித்திரவர்மன் தலைநகரை அடைந்ததும் முதலில் ஜெயசேனனைத் தான் கண்டு விக்கிரகம் கிடைத்தது பற்றிக் கூறினான். மன்னன் கூறியதைக் கவனமாய்க் கேட்ட மன்னன் ஒருபுறம் மகிழ்ச்சியும் மறுபுறம் வேதனையும் அடைந்தான்.

அதன் பின் அது பற்றிய விவாதம் நடக்க அதில் பலர் கலந்து கொண்டார்கள். இப்போதிருக்கும் இடத்திலிருந்து சக்தி விக்கிரகத்தை நகர்த்தக்கூடாது என்றும் அங்கேயே கோவில் கட்டி அந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்வது எனவும் முடிவு செய்யப்பட்டது. அந்த விக்கிரகத்தால் தேவ அனுக்கிரகமோ அல்லது நற்பயனோ அப்போதைய மன்னர் விசித்திர வர்மனுக்குக் கிட்டாதாம். பிற்காலத்தில் அவருடைய வம்சத்தில் வரும் ஒருவனுக்கு அதன் அனுக்



கிரகம் கிட்டுமாம். அவனும் அதன் அனுக்கிரகத்தால்தான் நாட்டை விரிவுபடுத்த, அவனது புகழ் எங்கும் பரவுமாம்.

அவனது ஆட்சியில் அத் தேவதையின் பெயர் எங்கும் பரவி, அதற்கு தினமும் வழிபாடுகளும் விழாக்களும் ஊர்வலங்களும் நடந்து மகிமையுள்ள தேவதை எனவும் பெயர் பெற்று விடுமாம்.

இதை எல்லாம் கேட்ட விசித்திரவர்மன்தான் ஏன் ஒரே சமயத்தில் மகிழ்ச்சியும் வேதனையும் அடைய நேர்ந்தது என்பதைப் புரிந்து கொண்டான். தான் தன் பிற்கால வம்சத்தவருக்குப் பெருமையையும் புகழையும் அளிக்கக் காரணமாக இருக்கப் போவது குறித்து மகிழ்ந்தான். அந்த சக்தி விக்கிரகத்திற்குக் காட்டிலேயே கோவில் கட்டி அந்த விக்கிரகத்தையும் அதில் பிரதிஷ்டை செய்தான்.

ஆனால் காட்டிற்குப் போய் அந்த தேவதையைப் பூசிப்போர் யாரும் இல்லாது போகவே கொஞ்ச காலத்துள் மக்கள் அக்கோவில் இருப்பதையே மறந்து விட்டார்கள். அது கடவுள் செயல் என எண்ணி விசித்திர வர்மன் அத்தேவதையைத் தன் மனத்தில் நினைத்து பூஜை செய்து வந்தான்.

இப்படியே சில ஆண்டுகள் கழித்தன. விசித்திர வர்மன் முத்து மாலையின் உதவியால் திறன்பட நல்லாட்சி புரிந்தான். சில இடங்களிலிருந்து புதையல்களை வெளிக்கொண்டு வந்து மக்கள் நலனுக்கான வேலைகளைச் செய்தான். அதனால் அவனது புகழ் எல்லா நாடுகளிலும் பரவியது. அத்தோடு அவன் அணிந்திருந்த முத்து மாலையின் சக்தியும் யாவருக்கும் தெரிந்தது. இந்தப் புகழ் சில இன்னல்களுக்குக் காரணமாகவும் ஆகிவிட்டது.

கோசல நாடு பலமிக்கதாய் மிகச் செழிப்புடன் விளங்கியது. அதன் கிழக்கே உள்ள எல்லைக் காட்டில் தான் அந்த சக்தி தேவியின் ஆலயம் இருந்தது.

காம்போஜத்தை அப்போது ஆண்ட சக்கராதித்தன் நல்லவனே. ஆனால் திறமையற்றவன். அவனது

ஆட்சியில் மக்கள் இன்னல்களை அனுபவித்தனர். கோசல நாட்டு ஆட்சி நன்கு இருக்க அந்த நாட்டு மக்கள் சுக வாழ்வு வாழ்வது கண்டு காம்போஜ மக்கள் கோசல நாட்டில் போய்த் தங்கலானார்கள். தர்ராள குணம் படைத்த விசித்திர வர்மன் அவர்களை ஆதரித்து சுகமாக வாழச் செய்தான்.

நாளாக ஆக விசித்திர வர்மனும் ஜெயசேனனும் சக்கராதித்தனும் கிழவர்களானார்கள். விசித்திர வர் மனின் மூத்த மகன் சிம்மாசனத்தில் அமர்ந்தான். சக்கராதித்தன் மகன் திறமையற்றவனாயினும் அவனும் சிம்மாசனத்தில் அமர ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கையில் சக்கரா தித்தனின் இரண்டாவது மகன் தன் தந்தையையும் அண்ணனையும் சிறைப்படுத்திவிட்டுத் தானே காம் போஜத்தின் மன்னன் என அறிவித் தான்.

காம்போஜத்தின் புதிய மன்னன் வருணதத்தன் மிகவும் கொடியவன். அவன் கோசல நாட்டின் முன்னேற் றம் கண்டும் அதன் புகழ் ஓங்குவதும் கண்டும், தன் நாட்டு மக்கள் அங்கு போய்த் தங்கி விடுவதையும் கண்டும் பொறாமையும் ஆத்திரமும் அடைந் தான். இவ்வளவுக்கும் காரணம் ஜெயசேனன் கோசல மன்னனுக்குக் கொடுத்த மந்திரசக்தி வாய்ந்த முத்து மாலைதான் ' என வருணதத்தன் எண்ணி அதை அபகரிக்கத் திட்டம்



போட்டான்.

புதிய கோசல மன்னன் ஜெய வர்மன் உல்லாசப் பிரியன் அழகிய கட்டடங்கள் அமைப்பதிலும் அயல் நாடுகளிலிருந்து வரும் நடனமாது களின் நடனங்களைக் கண்டு ரசித்து அவர்களுக்குப் பரிசளிப்பதிலும் தன் நேரத்தைக் கழித்து வந்தான். இது அவனது தந்தைக்கு வேதனையைத் தந்தது. மக்களிடையே கெட்ட பெயரை ஏற்படுத்தியது. காம்போஜ மன்னனுக்கோ அவனது இந்தப் போக்கு சாதகமாயிற்று.

வருணதத்தன் ஜெயவர்மனை மயக்கி அவன் அணிந்திருந்த முத்து மாலையைக் கவர்ந்து வர கனகலதா என்ற நடன மாதை அனுப்ப முடிவு



தெரிந்து விட்டது.

மன்னனானதும் ஜெயவர்மனுக்குத் தன் மந்திர சக்தி வாய்ந்த முத்து மாலையை விசித்திர வர்மன் கொடுத்திருந்தான். அது ஜெயவர்மன் கழுத்தில் தான் இருந்தது. அதை அபகரிக்க கனகலதா கோசலத்திற்கு வந்து விட்டாள் என்ற செய்தியும் விசித்திர வர்மனுக்குக் கிடைத்து விடவே அவன் எச்சரிக்கை அடைந்தான்.

அவன் ஜெயசேனனிடம் இது பற்றிக் கூறவே ஜெயசேனனும் "கவலை வேண்டாம். அந்த முத்து மாலை போல ஒரு போலி மாலை செய்து ஜெயவர்மனின் கழுத்தில் போட்டு விட்டு உண்மையான மாலையை நாம் எடுத்து பத்திரப் படுத்தி விடலாம்" என்றான். விசித்திர வர்மனும் "இதை எப்படிச் செய்வது?" என்று கேட்டான். ஜெயசேனனும் "ஜெயவர்மன் இரவில் தூங்கும் போது தன் கழுத்திலிருந்து மாலையைக் கழற்றித் தன் தலையணைக்கு அடியில்தான் வைக்கிறான். ஒரு நாளிரவு போலி மாலையை அங்கு வைத்து விட்டு உண்மையான மாலையை எடுத்து வரச் செய்யலாம்" என்றான். விசித்திரவர்மனும் அந்த யோசனையை ஏற்றான். அதன்படி ஒரு நம்பகமான வேலையாளைக் கொண்டு இந்த மாலை மாற்றத் திட்டமும் நிறைவேற்றப்பட்டது.

கனகலதா ஜெயவர்மனை அணு

செய்தான். அவளோ "ஐயோ! இதை எப்படிச் செய்வது? உண்மை வெளிப்பட்டால் எனக்கே ஆபத்தே" என்றான். வருணதத்தனோ "நீயோ ஜெயவர்மனிடமிருந்து மாலையைத் திருடப்போவதில்லை. பரிசாகத் தானே பெற்று வரப்போகிறாய். தைரியமாகப் போ. பயப்படாதே" என்று கூறி அனுப்பினான். அவளும் அவன் கொடுக்கப் போகும் பரிசிற்கு ஆசைப்பட்டு கோசல நாட்டிற்குச் சென்றாள்.

வருணதத்தனின் நடவடிக்கைகளை எல்லாம் விசித்திர வர்மன் ஒற்றர்கள் வாயிலாக அவ்வப்போது தெரிந்து கொண்டு வந்தான். அவனுக்கு வருண தத்தனின் திட்டமும்



ஜெயவர்மன் தான் மாபெரும் குற்றத்தைச் செய்து விட்டதாக உணர்ந்தான். அவன் தன் தந்தையைக் கண்டு சக்தி வாய்ந்த முத்து மாலை கைவிட்டுப் போனதைக் கண்ணீர் உகுத்தவாறே கூறினான். அப்போது விசித்திர வர்மனுடன் ஜெயசேனனும் இருந்தான்.

எல்லாவற்றையும் கேட்ட விசித்திர வர்மன் பெருமூச்சு விட்டவாறே "சரி அந்த மாலை நம் குடும்பத்தவரிடமிருந்து வேறு யாரிடம் போய் விட்டால் அதன் சக்தியும் போய் விடும். அதனால் இனி அந்த மாலையை மறந்து விடு" எனத் தேற்றினான்.

கியபோது அவன் கழுத்தில் போலி மாலைதான் இருந்தது. அது போலி என்பது அவனுக்கே தெரியாது. கனகலதா தன் நாட்டியத்தால் ஜெயவர்மனை மயக்கி அவன் அணிந்திருந்த முத்து மாலையைப் பரிசாகப் பெற்றுக் கொண்டு உடனேயே காம்போஜத்திற்குப் போய் விட்டாள்.

தான் அந்த மாலையைக் கனகலதாவிற்குப் பரிசாகத் தந்ததால் மாபெரும் சக்தியையே இழந்து விட்டதாக எண்ணி அவன் மனம் வருந்தினான். வம்ச பரம்பரையாக வந்த அந்த முத்து மாலை தன் பலவீனத்தால் கைவிட்டுப் போய் விட்டதே என்று எண்ணி எண்ணி ஏங்கினான்.

அது கேட்டு ஜெயவர்மனும் ஜெயசேனனும் ஆச்சரியப்பட்டார்கள். ஜெயவர்மன் தன் வேதனையை வெளிப்படுத்த ஏதோ கூற முயன்ற போது விசித்திர வர்மன் குறுக்கிட்டு "மன்னன் கலைஞர்களை ஆதரிக்க வேண்டியதுதான். ஆனால் அவன் வெறி பிடித்தவனாகி விடக் கூடாது. மன்னன் மக்களின் நலனைத் தான் முதலில் எண்ண வேண்டும். அவர்களது சுக துக்கங்களைக் கண்டு அவர்கள் நலமாய் வாழ வழி செய்ய வேண்டுமே அல்லாது தான் சுக வாழ்வு வாழ வேண்டும் என்ற சுய நலம் கருதக் கூடாது. இதை நினைவில் கொள்" எனக் கூறி அவனை அனுப்பி விட்டான்.

ஜெயவர்மன் போனதும் விசித்திர

வர்மன் ஜெயசேனனிடம் "நான் ஏன் மாலை வேறொருவரிடம் போய் விட்டால் அதன் சக்தி போய் விடும் என்று பொய் சொன்னேன் என்று நினைக்கிறாயா? நாம் ஏன் மாலையை மாற்றி வைத்தோம்?" எனக் கேட்டான். ஜெயசேனன் பதிலளிக்காமல் இருக்கவே விசித்திரவர்மன் "காம்போஜ மன்னன் அந்த மாலையை அபகரிக்க கனகலதாவை அனுப்பியதை முன் கூட்டியே தெரிந்து கொண்டதால் தானே நாம் மாலைகளை மாற்றினோம். ஏன்? ஜெயவர்மனின் பலஹீனம் நமக்குத் தெரிந்தது தானே. அவன் தன்னை மறந்து கனகலதாவின் சாகசங்களில் மயங்கி மாலையை அவளுக்குக் கொடுத்து விடுவான் என்றும் அது வருணதத்தனிடம் போய்ச் சேர்ந்துவிடும் என நாம் நினைத்தது சரியாகி விட்டது" என்று நிறுத்தினான்.

ஜெயசேனன் மௌனமாக இருக்கவே விசித்திர வர்மனும் "ஜெயசேனா! நீ என் மகன் மீது எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறாய் என்பது எனக்குத் தெரியாதா? இனி உண்மையான மாலையை அவனிடம் கொடுத்து விடலாம் என்று கூட நீ நினைப்பாய். ஆனால் இந்த விஷயத்தில் பாசத்தைவிட கடமையைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஜெயவர்மன் இப்போது வருந்தினாலும் பிற்காலத்தில் அவனது கேளிக்கை மனப்பான்மை மாறும் என்பது



என்ன நிச்சயம்? மேலும் மாலை மாற்றம் நடந்து தனக்குக் கிடைத்தது போலி மாலை என்றும் உண்மையான மாலை இன்னமும் இருக்கிறது என்றும் வருணதத்தன் அறிந்து விட்டால் அவன் மறுபடியும் அந்த மாலையைக் கவரத்தானே முயல்வான்! இப்போது நிலை என்ன? ஒரு மாலைதான் உள்ளது. அதுவும் நம் வம்சத்தவரிடமிருந்து போய் விட்டால் அதன் மந்திரசக்தி போய் விடும் என்று தானே எல்லோரும் நினைக்கிறார்கள். கொஞ்ச நாளில் எல்லோருமே மாலையைப் பற்றி மறந்து விடுவார்கள். அதனால் நான் ஒரு முடிவுக்கு வந்தேன். பிற்காலத்தில் இந்த சக்தி வாய்ந்த மாலை

தகுதியும் திறமையும் வாய்ந்த என் சந்ததியில் வந்த ஒருவனுக்கே சேர வேண்டும்" என்றான்.

ஜெயசேனனும் விசித்திர வர்மன் கூறியதே சரி என நினைத்தான். முத்து மாலை சக்தி இழந்து விடும் என்ற வதந்தி பரவி வருணதத்தனுக்கும் எட்டியது. தனக்குக் கிடைத்த முத்து மாலை சக்தி இழந்தது எனக் கேட்டதும் அவன் மனமுடைந்து போனான்!

ஆனால் ஜெயவர்மனிடம் பெருத்த மாறுதல் ஏற்பட்டு விட்டது. அவன் கேளிக்கைகளில் ஈடுபடாமல் மன்னன் செய்யவேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்து வந்தான். கொஞ்ச காலத்திற்குப் பின் அவனது தந்தை விசித்திர வர்மனும் இறந்து போனான். அதற்குப் பின் ஜெயசேனனும் படுத்த படுக்கையாகி இறக்கும் நிலையை அடைந்தான்.

அப்போது அவன் ஜெயவர்மனிடம் மந்திர முத்து மாலையைப் பற்றி நடந்ததை விவரமாகக் கூறி "உன் தந்தை உன்னை நம்பவில்லை. உனக்கு உண்மையான முத்து மாலையைக் கொடுத்தால் நீ அதை மறுபடியும் யாருக்காவது பரிசாகக் கொடுத்து விடுவாயோ என்று அஞ்சினார். எனவே அந்த முத்து மாலை, உன் மகனுக்கோ உன் பேரனுக்கோ போய்ச் சேர வேண்டும் என்பதே உன் தந்தையின் விருப்பம். இவ்வளவு இருந்தும் உன் தந்தை அந்த சக்தி வாய்ந்த முத்து மாலையை எங்கே வைத்திருக்கிறார் என்பதைக் கூட என்னிடம் கூறவில்லை. இந்தக் கடிதத்தை மட்டும் என்னிடம் கொடுத்து நான் இறக்குமுன் இதை உன்னிடம் கொடுக்கச் சொன்னார்" என்று கூறி ஒரு சிறு மரப்பெட்டியை எடுத்து அவனிடம் கொடுத்து விட்டு உயிர் நீத்தான்.

(தொடரும்)







# தண்டனை சரியா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து" மன்னனே! பயங்கர இந்த நள்ளிரவில் பல இன்னல்களுக்கும் இடையே நீ விடாப்பிடியாய் முயல்வது பாராட்டத்தக்கதே. நீ எதற்காக இதைச் செய்ய வேண்டும்? ஒரு சிலர் தம் சக்தி சாமர்த்தியத்தால் எதையும் சாதிக்க முடியும் என்று கூறலாம். அது உண்மையோ பொய்யோ யார் கண்டார்கள்? உன்னை யாராவது இவ்வேலையைச் செய்யத் தூண்டினார்களா? உனக்கு சிரமம் தெரியாதிருக்க இந்து வர்மன் என்பவனின் கதையைக் கூறுகிறேன்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



இங்கிதபுரியை இந்துவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். ஒரு நாள் காட்டில் வேட்டையாடப் போய் அங்குமிங்கும அலைந்து ஒரு முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். அதில் விவேகசீலர் என்ற முனிவர் இருந்தார். அவர் இந்துவர்மனை வரவேற்று அவனுக்கு உண்பதற்குப் பழங்களையும் நீரையும் கொடுத்து உபசரித்தார்.

களைப்பைப் போக்கிக் கொண்ட இந்துவர்மன் "சுவாமி! நான் இங்கிதபுரி மன்னன் இந்துவர்மன். தாங்கள் இந்தக் காட்டில் எவ்வளவு காலமாக இருந்து வருகிறீர்களோ?" என்று கேட்டான். விவேகசீலரும் "நானும் ஒரு காலத்தில் மன்னனாக இருந்தவன். என் பெயர் விவேக சீலன். என் மக்கள் திருட்டு மற்றும் குற்றங்கள் பலவற்றால் துன்பப்படாமல் இருக்க அவற்றைச் செய்பவர்களை கடுமையாக தண்டித்து வந்தேன். திடீரென நான் நோயுற்றேன். எந்த மருந்தினாலும் அந்த நோய் குணமடையவில்லை. அப்போது இமய மலையிலிருந்து ஒரு யோகி வந்தார். அவர் என்னைப் பார்த்து "நீ குற்றவாளிகளை மிகக் கடுமையாக தண்டித்தாய். குற்றங்களுக்கு ஏற்ப சரியான தண்டனை அளிக்கவில்லை. அந்தப் பாவமே உன்னை நோயாகப் பற்றியுள்ளது. நீ காட்டிற்குப் போய் தவம் செய்து உன் பாவத்தைப் போக்கிக் கொள்" எனக் கூறிவிட்டுச் சென்றார். நானும் என் தம்பியிடம் நாட்டை ஒப்படைத்து விட்டு காட்டிற்கு வந்தேன். என் தம்பி கொஞ்ச நாட்களானதும் நாட்டைத் தானே வைத்துக் கொண்டு விட வேண்டும் என்ற ஆசையில் என்னைக் கொல்ல இரு வீரர்களை அனுப்பினான். அவர்கள் என்னிடம் விசுவாசம் கொண்டவர்கள். அதனால் என்னிடம் என் தம்பியின் துரோகச் செயலைக் கூறி விட்டு ஏதோ ஒரு மிருகத்தைக் கொன்று அதன் ரத்தத்தை எடுத்துக் கொண்டு திரும்பிப் போய் என் தம்பியிடம் அதனைக் காட்டி என்னைக் கொன்று விட்டதாகச் சொல்லி விட்டார்கள். நானும் அப்போது முதல் ஓரிடத்தில்

நிலையாக இல்லாமல் ஆண்டுக்கு ஒரு முறை இருக்கும் இடத்தை மாற்றி வருகிறேன். இன்னும் சில நாட்களில் இமயமலைக்குப் போகப் போகிறேன்" என்றார்.

இதைக் கேட்ட இந்து வர்மன் ஆச்சரியப்பட்டு "சுவாமி! குற்றவாளி களைக் கடுமையாகத் தண்டிக்கா விட்டால் குற்றங்கள்தானே பெருகும்? நான் அவர்களைக் கடுமையாக தண் டித்து வருவதால் என்னையும நோய் பீடிக்குமா? நானும் தவம் செய்ய வேண்டியதுதானா?" என்று கேட் டான்.

விவேக சீலரும் "எல்லாப் பாவங் களும் எல்லோரையும் ஒரே மாதிரி பாதிக்காது. நான் என் வாழ்க்கையில் வேறு பல பாவங்களையும் புரிந் திருக்கிறேன். அவற்றோடு இந்தப் பாவமும் சேர்ந்து என்னை இப்படிச் செய்து விட்டது. நீ பயப்படாதே. உனக்கு ஒரு படிக மணியைக் கொடுக்கிறேன். குற்றத்திற்கு தண் டனை விதிப்பதில் அது உனக்கு உதவும்" என்று கூறி ஒரு படிக மணியைக் கொடுத்தார்.

இந்துவர்மன் அதனை வாங்கிப் பார்த்துக் கொண்டிருக்கையில் விவேக சீலரும் "இதை நான் என் தவ வலிமையால் அடைந்தேன். நான் இமயத்திற்குப் போகுமுன் இதை யாராவது ஒரு மன்னனிடம் கொடுக்க நினைத்தேன். நீ வந்தாய். தண்டனை விதிக்கும் போது நீ இந்த மணியைப் பார். சரியான தண் டனையாக இருந்தால் மஞ்சளாகவும்,





அதிகமான தண்டனை என்றால் சிவப்பாகவும், குறைவான தண்டனை என்றால் கருப்பாகவும் இது நிறம் மாறும். இதைக் குற்றவாளிக்குத் தண்டனை வழங்கும் போது ப்யன்படுத்திக் கொள்" என்றார்.

இந்துவர்மன் படிக மணியுடன் தலைநகருக்குத் திரும்பி வந்தான். அதுவரை குற்றவாளிகளை அவனே விசாரித்து தன்டனை வழங்கி வந்தான். இப்போது ஐந்து நீதிபதிகள் அடங்கிய ஒரு குழுவை அமைத்து அவர்கள் தனக்கு விசாரணையின் போது யோசனைகளைக் கூறச் சொன்னான். அவர்கள் தனித்தனியே கூறுவதைக் கேட்டு தண்டனையைக் குறைவாக விதித்து வந்தான். அப்போது படிகமணி கருப்பாக மாறி விடும்.

இம்மாதிரி சோதனைகளில் படிக மணி கருப்பாகவோ சிவப்பாகவோ, மாறி வந்ததேயொழிய ஒரு முறை கூட மஞ்சளாக மாறியதில்லை. அதனால் எந்தக் குற்றத்திற்கு எது சரியான தண்டனை என்று இந்துவர்மனால் நிர்ணயிக்க முடியவில்லை.

இந்துவர்மன் படிகமணி பற்றி யாரிடமும் கூறவில்லை. அதைக் கொண்டு அவன் ரகசியமாகவே சோதித்து வந்தான். எந்த நீதிபதியும் பண்டிதரும் குற்றத்திற்கு ஏற்ற சரியான தண்டனை கூறவில்லை என்பதை அந்த மணி காட்டியது. ஒரு முறை கூட அது மஞ்சளாக மாறாதது அவனுக்கு ஆச்சரியத்தையே விளைவித்தது. அதனால் நீதி வழங்குவது எவ்வளவு கடினமானது என்பதனை அவன் புரிந்து கொண்டான்.

இந்துவர்மனிடம் படிக மணி எப்போதும் இருந்து கொண்டே இருக்கும். ஒரு நாள் அவன் மாறு வேடத்தில் நகரைச் சுற்றி வந்தான். அப்போது ஒரு விசித்திரக் காட்சியைக் கண்டான். ஏழை போலிருந்த ஒருவன் பணக்காரன் போல் இருந்த ஒருவனிடம் ஒரு பண மூட்டையைக் கொடுத்துக் கொண்டிருந்தான். அந்த ஏழையின் கண்ணீர் ததும்பி வழிந்தது. அதைக் கண்ட இந்துவர்மன் அந்தப் பணக்காரன் ஏழையை

ஏமாற்றுகிறான் என நினைத்தான்.

இந்துவர்மன் அவர்களை அணுகி "இங்கே நடக்கிறது?" என்று அதட்டிக் கேட்டான். ஏழையும் "இவர் பெரும் பணக்காரர். எனக்கு இவர் உதவ என் சேமிப்பை எல்லாம் இவரிடம் கொடுக்கிறேன்" என்றான். மன்னனும் "நீ இவரிடம் எப்படிப் பட்ட உதவியை எதிர்பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

ஏழையும் "ஐயா! எனக்கு நான்கு புதல்வர்கள். ஒருநாள் ஒரு யோகி என் வீட்டிற்கு வந்து அவர்களைப் பார்த்துவிட்டு இந்த நால்வரின் ஒருவன் மகாஞானியாவான் என்றும் அவனுக்கு நல்ல படிப்பு சொல்லிக் கொடு என்றும் கூறினார். ஆனால் அவர்களில் யாருக்கு கல்வி அளிக்க வேண்டும் என்பதைக் கூறாமலே போய் விட்டார். என்னால் நான்கு பேர்களையும் படிக்க வைக்க முடியாது. அதனால் என் மகன்களுள் யார் ஞானி ஆவான் எனக் கண்டு தேர்ந்தெடுக்கும் படி இவரை அணுகினேன்" என்றான்.

மன்னன் பணக்காரனிடமிருந்து பண மூட்டையை வாங்கி ஏழையிடம் கொடுத்து "என்னோடு வா. உனக்கு நான் உதவுகிறேன்" எனக் கூறி அவனை அழைத்துக் கொண்டு அவனது குடிசையை அடைந்தான். அப்போது அங்கு ஒரு வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

ஏழையின் நான்கு புதல்வர்களும் ஒரு மண் பொம்மை செய்து கொண்





டிருந்தார்கள். அந்த பொம்மையைக் கண்டவர்கள் அதனை நல்ல விலைக்கு விற்கலாம் என்று கூறிக் கொண்டிருக்கும்போதே அடுத்த வீட்டுப் பையன் வேலு ஓடி வந்து அந்த பொம்மையை உடைத்து விட்டு ஓடினான். ஆனால் நான்கு சகோதரர்களும் அவனைத் துரத்திப் பிடித்து இழுத்து வந்தார்கள். அவனுக்கு என்ன தண்டனை கொடுப்பது என்ற பிரச்னை எழுந்தது.

இது ஒரு நல்ல வாய்ப்பு என இந்துவர்மன் கருதி படிக மணியைக் கையில் வைத்துக் கொண்டான். அவன் ஏழையின் மூத்த மகனிடம் "நீ இவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று நினைக்கிறாய்?" என்று கேட்டான். அவன் "நூறு சவுக்கடிகள் கொடுப்பதுதான் சரி" எனவே இந்துவர்மனின் கையிலிருந்து படிகமணி சிவப்பாக மாறியது. மன்னன் இரண்டாவது மகனிடம் தண்டனை பற்றிக் கேட்க" அந்த வேலுவிடமுள்ள பொம்மைகளை எல்லாம் எடுத்த உடைத்துப் போட வேண்டும்" என்றான். அப்போதும் இந்துவர்மனிடமுள்ள படிக மணி சிவப்பாக இருந்தது.

மூன்றாவது மகனிடம் தண்டனை பற்றிக் கேட்கவே அவன் "வேலுவை இதே மாதிரி ஒரு பொம்மையைச் செய்யச் சொல்லி அதை நாம் உடைத்தெறிய வேண்டும்" என்றான். அப்போது இந்துவர்மனின் படிக மணி கருப்பாக மாறியது.

அப்போது நான்காவது மகன் "வேலுவை தண்டிப்பதால் உடைந்து போன பொம்மை எங்களுக்குத் திரும்பக் கிடைக்கபோவதில்லை. அதனால் அவன் செய்த தவறை அவனே உணரும்படிச் செய்யவேண்டும்" என்றான். அப்போது இந்துவர்மனின் படிகமணி மஞ்சளாக மாறியது.

அப்போது இந்து வர்மன் அந்தக் கடைசி மகனே மகர்ஞானியாவான் என அறிந்து கொண்டான். ஏழையிடம் அவன் தான் யாரென்பதைக் கூறி நாலாவது மகனுக்கு கல்வி கற்பிக்ககத் தானே ஏற்பாடு செய்வதாகச் சொல்லித் தன்னோடு அழைத்துச்

சென்றான். ஏழைக்கு நிறைய பொரு ளுதவி செய்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "சட்டப்படி தண்டனை என்பது சமூகத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப மாறுகிறது. இது ஆள்பவர்கள் தமது சாதக பாதகங்களைக் கருத்தில் கொண்டு எழுதப்படுவது. அதனால் ஒரு காலத்தில் ஒரு நீதிபதி அளித்த தீர்ப்பு வேறொரு காலத்தில் சரியான தாக இல்லாமல் போகலாம். இதனால் இந்துவர்மனிடமிருந்த படிக மணியின் அறிவிப்புகள் சரியானவை அல்ல என்று தானே கருத வேண்டும்? இந்த என் சந்தேகத்திற்கு நீ சரியான விடை தெரிந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "காலத்திற்கேற்ப சட்டங்கள் மாறுகின்றனதான். ஆனால் இந்துவர்மன் தன் காலத்தில் அமுலிலுள்ள சட்டங்களின்படி குற்றங்களுக்கு ஏற்றபடி தண்டனை விதிக்கப்படுகிறதா என அறியத்தான் முயன்றான். படிக மணிக்குச் சுயமாகத் தீர்ப்பளிக்கும் சக்தி கிடையாது. அப்போதைய சட்டப்படி தண்டனை சரியா இல்லையா என்பதைத்தான் அது தெரிவிக்கும். நீதிபதிகள் சில சமயங்களில் உணர்ச்சிவசப்பட்டு கடுந்தண்டனையையோ குறைவான தண்டனையோ அளித்தும் விடக் கூடும். எனவே படிகமணியின் அறிவிப்புகள் சரியானவை என்பது தெளிவாகிறது. இந்து வர்மன் அதன் உதவியால் குறைவான தண்டனைதான் அளித்தான். அவன் தண்டனை அளிக்காமல் இருந்து விடவில்லை" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்து உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மறக்காமல் இருக்க!

ராமசாமியை வழியில் கண்ட கிருஷ்ணசாமி "உன் வீட்டில் தொடர்ந்து மூன்றுமுறை திருடர்கள் இரும்புப் பெட்டியிலிருந்து பணத்தைத் திருடிக் கொண்டு போனார்களாமே. இது உண்மையா?" என்று கேட்டான். ராமசாமியும் ஆமாம் எனவே கிருஷ்ணசாமி "அது எப்படி? அவர்கள் இரும்புப் பெட்டியை உடைத்தபோது அந்த சத்தம்கூட உன் காதில் விழவில்லையா?" என்று கேட்டான்.

ராமசாமியும் "அவர்கள் இரும்புப் பெட்டியை உடைக்கவில்லை. என் தலையணைக்கு அடியே நான் வைத்திருந்த சாவியை எடுத்துத் திறந்தார்கள்" என்றான். அப்போது கிருஷ்ணசாமி "மூன்று முறைகளிலுமா தலையணைக்கு அடியிலிருந்து சாவியை எடுத்தார்கள்? முதல் தடவை இப்படி நடந்தபின் சாவியை வேறு பத்திரமான இடத்தில் வைக்கக் கூடாதா?" என்று கேட்டான்.

ராமசாமியும் "அப்படித்தான் இரண்டாவது முறை சாவியைப் பரண்மீதும் மூன்றாவது முறை அரிசிப் பானையிலும் வைத்தேன். ஆனால் எனக்கு ஞாபக மறதி அதிகம். அதனால் இன்ன இடத்தில் வைத்தேன் என இரு முறைகளிலும் ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதித் தலையணைக்கு அடியில் வைத்துக் கொண்டேன்" என்றான்.

அது கேட்டு கிருஷ்ணசாமிக்குச் சிரிப்புத்தான் வந்தது.



## அம்புலிமாமா அனுபந்தம் - 68

நம் நாட்டு மரங்கள் :

## பலாமரம்



நாம் முத்தமிழ், மூவேந்தர் என்றெல்லாம் கூறுவது போல முக்கனிகள் என்றும் கூறுகிறோம். அவை மா, வாழை, பலா என்பனவாம். மலையாள மொழியில் பலாவைச் சக்கை என்கிறார்கள். ஒருவேளை இதுதான் திரிந்து ஆங்கிலத்தில் 'ஜாக்' என்ற சொல்லாக வந்தது போலும்.

புகழ்பெற்ற கிரேக்க வரலாற்று ஆசிரியரான டியோ பிராடஸ் (கி.மு. 300) இதைப் பற்றிக் குறிப்பிடுகையில் பாரத நாட்டில் சாதுக்கள் சாப்பிடும் பழம் என்றும் இது பெரிய மரங்களில் காய்க்கும் என்றும் கூறியுள்ளார். 14வது நூற்றாண்டில் வாழ்ந்த இத்தாலிய யாத்திரிகர் மார்கினொல்லோ ஒரு பலாப்பழம் ஒரு ஆட்டுக்குட்டியின் அளவு இருக்கும் என எழுதினார்.

எப்போதும் பசுமையாக உள்ள பலா மரம் சுமார் 15 மீட்டர் உயரம் வளரும். இது நம் நாட்டில் மேற்குக் கடற்கரைப் பகுதியில் மிக அதிகமாயும் உத்திர பிரதேசம், அஸ்ஸாம், பீகார் ஆகிய மாநிலங்களில் ஆங்காங்கேயும் வளர்கிறது. இது மணல்பாங்கான இடத்தில் நன்கு வளரும்.

இதன் இலைகள் பச்சையாய் வட்ட வடிவில் இருக்கும். குளிர் கால முடிவில் கொத்துக் கொத்தாய்ப் பூக்கும். ஆனால் இந்தப் பூக்கள் விரைவில் உதிர்ந்து விடுபவை. இலைகளுக்குச் சற்று தள்ளி கொம்புகளில் பலா காய்க்கும். காய் பழுக்கும்போது நல்ல வாசனை வெளிவரும். ஆரம்பத்தில் பச்சையாகவும் பிறகு மஞ்சளாகவும் இதன் சுளைகள் இருக்கும். பலாப்பழம் உருண்டையாய் சுமார் 20-30 கிலோ நிறையுள்ளதாக இருக்கும். இதன் மேல் தோல் தடிமனாய் முள் நிறைந்தது போலிருக்கும். உள்ளே இனிப்பான பலாச்சுளைகளும் அவற்றுள் வெள்ளை நிறக் கொட்டைகளும் இருக்கும்.

பலா சாதரரணமாக மார்ச்சிலிருந்து ஜூன் வரை பழுக்கும். சில சமயம் பருவ காலம் மாறினால் செப்டம்பர் வரை கிடைக்கும். பலாக்காய்களை கறியாக்கி உண்கிறார்கள். பலா மரம் அறுக்கப்பட்டு கதவுகளாகவும், ஜன்னல்களாகவும் அலமாரிகளாகவும் செய்யப் பயன்படுகிறது. மஞ்சள் நிறம் பலாப்பலகை கருப்பாக மாறி பாலிஷ் செய்யப்பட்டால் பளபளப்பாய் ஈட்டி மரம் போல இருக்கும்.



## புகழ்பெற்ற மத நூல்கள்

# திருக்குரான்

இஸ்லாம் மதத்தை நிறுவிய நபிகள் நாயகம் அரேபியாவிலுள்ள மெக்கா நகரில் கி.பி.570-ல் பிறந்தார். அவர் சிறுவயதில் வியாபாரம் செய்து ஒட்டகங்களின் மீதேறிப் பல பகுதிகளில் திரிந்தார். ஆனால் பிற்காலத்தில் ஆண்டவன் தன் வாயிலாக மக்களுக்கு நல்லுரை வழங்க எண்ணி அந்த மகத்தான பணியை தன்னிடம் விட்டிருக்கிறார் என்பது போல அவர் உணர்ந்தார். நியாயமானதும் நீதிநெறிகள் பொதிந்ததுமான அறிவுரைகளை ஆண்டவனிடமிருந்து அடைந்து அவற்றை முகம்மது நபி மக்களுக்கு வழங்கினார். இந்த அறிவுரைகள் எல்லாம் திருக்குரானில் அடங்கி உள்ளன.

இஸ்லாம் என்றால் ஆண்டவனுக்கு அடங்கி அமைதியுடன் இருப்பது எனப் பொருள் கூறுகிறார்கள். இஸ்லாம் மதத்தைத் தழுவுபவர்களை மகம்மதியர்கள் என்றும் முஸ்லிம்கள் என்றும் கூறுகிறார்கள்.

முஸ்லிம்களின் புனித நூல் திருக்குரான். ஆண்டவன் ஒருவனே என்று இது போதிக்கிறது. ஆண்டவன் எங்கும் இருக்கிறார். "கிழக்கு மேற்கு எல்லாம் ஆண்டவனுடையதே. எவ்வழியில் சென்றாலும் அவனை அடைந்து விடலாம். அவன் எங்கும் நிறைந்தவன். எல்லாம் அறிந்தவன்" என்று குரான் கூறுகிறது.

மிகவும் கருணை பொருந்திய அல்லாவின் பெயரால் அல்லாவின் வெற்றி. அவரே எல்லோரின் அதிபர். மிகவும் இரக்கமுடையவர், கருணை கொண்டவர். நீதி நெறி சற்றும் வழுவாது தீர்ப்பளிக்கும் நீதிபதி. உங்களை மட்டுமே நாங்கள் வணங்குகிறோம். உங்களிடம் மட்டுமே உதவி கோருகிறோம்"

எங்களை நல்வழியில் செலுத்துவீர். உங்களை நம்பி உங்கள் கருணையை அறிந்தவர்களின் வழியில் எங்களையும் செல்லச் செய்யுங்கள். உங்களுக்கு விருப்பமில்லாத வழியில் செல்பவர்களின் பின்னோ அல்லது உங்களைவிட்டு விலகிச் சென்றவர் வழியிலோ அல்ல"

நல்லறிவு பெறவும் நீதி நேர்மைக்கும் குரான் வழி வகுக்கிறது. பிறந்தது முதல் இறக்கும் வரை அறிவை வளர்த்துக் கொண்டே செல்ல வேண்டும் என்று அது உரைக்கிறது.

தற்போதைய எழுத்தாளர் அஸ்கர் அலி என்ஜினியர் இவ்வாறு கூறுகிறார்.

"உலகில் எந்த மதமும் வெறுப்பையும், வன்முறையையும் தூண்டி விடுவதில்லை. உண்மையில் இம்மாதிரியான அழிவு சக்திகளைப் போக்கவே மதம் தேவை. எந்த மதமும் நல்வழியில் செல்லவும் அன்பு கொள்ளவும் நீதி நேர்மையுடன் நடக்கவும் போதிக்கிறது. இஸ்லாமும் இதையேதான் கூறுகிறது. காபிர்களைப் பற்றிய சில குறிப்புகள் அக்கால வரலாற்றின் அடிப்படையில் புரிந்த கொள்ளப்பட வேண்டும். அவை அந்தக் காலத்திற்குத்தான் பொருந்துமேயல்லாது என்றென்றைக்கும் அல்ல."



# உங்களுக்குத் தெரியுமா?

1. சுதந்திர கென்யாவின் முதலாவது பிரதமரும், அதிபரும் யார்?
2. நம் நாட்டில் மிகப் பெரிய நகரம் எது?
3. மத்திய தரைக்கடலில் முக்கோண வடிவிலுள்ள தீவு எது?
4. இந்தோனேசியாவில் ஆயிரம் கோவில் தீவு என்று எந்தத் தீவைக் கூறுகிறார்கள்?
5. உலகில் மிக உயரத்தில் அமைந்துள்ள நாடு எது?
6. மூன்று இருதயங்கள் கொண்ட பிராணி எது?
7. பெர்லின் சதி எப்போது ஏற்பட்டு எப்போது முடிவுற்றது.
8. ஒரு ஆசிய நாட்டின் தலை நகர் அயோத்தியாக இருந்தது. அது எது?
9. ஆப்ரஹாம் லிங்கனின் மனைவி யார்?
10. இங்கிலாந்தைக் கூட்டாக ஆண்ட தம்பதிகள் யார்?
11. உலகில் மக்கள் தொகை அதிகமுள்ள நகரம் எது?
12. வாஷிங்டனுக்கு முன் அமெரிக்காவின் தலைநகராக எது இருந்தது?
13. பல்லில்லாத பிராணி எது?
14. பார்சிலோனா ஸ்பெயினில் ஒரு நகரம். இதே பெயரில் தென்னமெரிக்காவில் ஒரு நகரம் உள்ளது. அது எங்கே?
15. உருளைக் கிழங்கு முதலில் எங்கு பயிரிடப்பட்டது?
16. டான்ஜினியா மான்யாரா தேசியப் பூங்காவில் ஒருவகை மிருகங்கள் ஏராளமாக உள்ளன அது எது?

## விடைகள்

1. ஜோமோ கின்யாடா
2. கல்கத்தா
3. சிசிலி
4. பாலி
5. ஸ்விட்ஸர்லாந்து
6. கடில் பிஷ் என்ற மீன்
7. 1961–ல் 1989–ல்
8. தாய்லாந்து
9. மேரி டாட்
10. மூன்றாவது வில்லியம்
    இரண்டாம் மேரி.
11. சீனாவின் ஷாங்காய்
12. பில்டெல்பியா
13. 'ஆண்ட் ஈடர்'
14. வெனிஜுவெலா
15. தென் அமெரிக்கா
16. யானை.



# இருதானங்கள்

வேம்பூரில் வெங்கடசாமி என்ற பண்ணையார் இருந்தார். அவரை எல்லோரும் கர்ண பிரபு என்ற பாராட்டி வந்தனர். ஏனெனில் அவர் ஏராளமான தான தர்மங்களைச் செய்து வந்தார். அதனால் அவரது சொத்தெல்லாம் கரைந்து கொண்டே போயிற்று. அது கண்டு சற்றும் மனம் தளராமல் அவர் பிறரது நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்து எப்போதும் போல வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் வெங்கடசாமி வீட்டுத் திண்ணையில் அவரும் அவ்வூர் புரோகிதர் பரமேசுவரனும் உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு பிராம்மணர் அங்கு வந்தார். வெங்கடசாமி அவரை வணங்கி வரவேற்றுப் புரோகிதரின் பக்கத்தில் உட்காரச் சொன்னார்.

அவர் தம்மிடம் வந்த காரணம் என்னவோ என்று வெங்கடசாமி கேட்க அந்த பிராம்மணரும் “நான் இவ்வூர் பணக்காரர் திருவேங்கடத்தின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவிற்கு வந்தேன். அவர் அவரது முன்னோர்களைப் போல பிராம்மணர்களுக்கு வேஷ்டியும் கை நிறைய தட்சணையும் கொடுப்பார் என்று எதிர்பார்த்து பத்து மைல் தூரத்திலிருந்து நடந்து இங்கு வந்தேன். ஆனால் அவர் கொடுத்த இந்த கால் ரூபாய் தட்சணையைக் கண்டு மனம் உடைந்து போனேன். நான் வந்தது என் முட்டாள்தனத்தால் தானே என எண்ணி ஊர் திரும்ப நினைத்தபோது உங்களைப் பற்றி அப்போது பலரும் சொன்னதைக் கேட்டேன். கொடையாளி என்று பெயர் பெற்ற உங்களைப் பார்த்து விட்டு போகலாம் என்றுதான் வந்

- பவானி சங்கரன் -



விட்டுப் பிறகு பூமி தானம் கொடுப்பதாகச் சொன்னேன். இன்னும் அதைச் செய்து முடிக்கவில்லை. அதை நான் விரைவில் செய்யும் நிலை ஏற்பட வேண்டும் என்று என்னை ஆசீர்வதியுங்கள்" என்றார்.

பிராம்மணரும் வெங்கடசாமி கொடுத்ததை எல்லாம் எடுத்துக் கொண்டு அவரது உள்ளங்கையை நீட்டச் சொன்னார். வெங்கடசாமியும் உள்ளங்கையை காட்டவே அதைப் பார்த்து விட்டு அந்தப் பிராம்மணர் "உங்கள் கையில் தான ரேகை மிகத் தெளிவாக இருப்பதால் வாழ்நாள் முழுவதும் நீங்கள் தானம் செய்து கொண்டே இருப்பீர்கள். புரோகிதருக்கு நீங்கள் வாக்களித்தபடி விரைவில் பூமி கிடைத்துவிடும்" என்று கூறி ஆசீர்வதித்தார்.

புரோகிதரும் "இவர் வாக்களித்தபடி இவர் எனக்கு பூமியை தானம் கொடுத்தாலும் ஆச்சரியப்பட மாட்டேன். ஆனால் அப்படி நிலம் கிடைத்து விட்டால் என் புரோகிதத் தொழிலைத் தொடர்ந்து நடத்த முடியாமல் போய் விடுமோ என்று பயமாக இருக்கிறது" என்றார்.

இதற்குக் கொஞ்ச காலத்திற்குப் பின் வேம்பூர் அருகே ஓடும் நதியில் அணை கட்டப்பட்டு கால்வாய்கள் வெட்டப்பட்டன. இதனால் ஆற்றின் நீர் மட்டம் குறைந்து ஆங்காங்கே மணல் திட்டுகள் தோன்றின ஒரு காலத்தில் சர்குபடி செய்யப்பட்ட

தேன்" என்றார்.

அதைக் கேட்டு வெங்கடசாமி சட்டென எழுந்து வீட்டிற்குள் போனார். ஒரு தட்டில் ஒரு ஜதை வேஷ்டி, தேங்காய், பழம், பத்து ரூபாய் தட்சணை வைத்து எடுத்து வந்து அவர் அப்பிராம்மணரிடம் கொடுத்து "இதை ஏற்றுக் கொள்ளுங்கள். கர்ணன் போல் அள்ளிக் கொடுக்க முடியாமல் போனாலும் என் சக்திக்குத் தகுந்ததைக் கொடுக்கிறேன்" என்றார்.

பிறகு அவர் "என் தாயார் இறந்த போது என்னால் பூதானம் செய்ய முடியாமல் போயிற்று. இந்தப் புரோகிதருக்கு அப்போது ஒரு ரூபாய் தட்சிணை கொடுத்து

அப்பகுதி ஆற்றின் போக்கு மாறிய தால் நீரில் அமிழ்ந்து போய்விட்டது. இப்போது நீரோட்டம் இல்லாது போகவே அது நிலப்பரப்பாகியது.

ஒருநாள் அந்த கிராமத்துக் கணக் குப் பிள்ளை வெங்கடசாமியின் வீட் டிற்கு வந்து "ஐயா! உங்களுக்கு அதிர்ஷ்டம்தான். ஆற்று நீர் வற்றிய பின் ஏற்பட்ட நிலப்பரப்புகளைப் பற்றி முந்தைய பதிவேடுகளைப் பார்த்தோம். அவற்றில் உங்கள் முன்னோர்களுக்குப் பத்து ஏக்கர் நிலம் சொந்தம் என்று உள்ளது. அதை உங்களிடம் ஒப்படைக் கிறோம்" என்றார்.

அதைக்கேட்டு வெங்கடசாமி மிக்க மகிழ்ச்சி அடைந்தார். கணக்குப் பிள்ளையை உட்காரச் சொல்லி உபசரித்து உடனே புரோகிதரை அழைத்து வர ஒரு ஆளை அனுப் பினார். புரோகிதர் வந்ததும் வெங் கடசாமி கணக்குப் பிள்ளையிடம் "ஐயா! என் தாயார் இறந்தபோது பூதானம் செய்வதாக இவருக்கு வாக்களித்திருந்தேன். அதை நிறை வேற்றாமலேயே நான் இறந்து விடு வேனோ என்று இதுநாள் வரை பயந்து கொண்டிருந்தேன். இப் போது நீங்கள் கூறிய நிலத்தை இந் தப் புரோகிதர் பெயருக்கு மாற்றி விடுங்கள்" என்றார்.

இதைக் கேட்ட புரோகிதர் மலைத்து நின்றார். அப்போது வெளி யூரிலிருந்து வந்த பிராம்மணர் முன் வெங்கடசாமி கூறியது அவர் நினை விற்கு வந்தது. அதை ஏற்காவிட்டால்



வெங்கடசாமியின் மனம் வருந்தும். அதனால் அவர் நன்கு யோசித்து "இந்த பூதானத்தோடு இன்னொரு தானமும் செய்தால் இதனை ஏற்கிறேன்" என்றார்.

அதைக் கேட்ட கணக்குப்பிள்ளை திகைத்துப் போனார். இதென்ன இந்தப் புரோகிதர் ஒரு தானம் கிடைத்ததே என்று திருப்திப்படாமல் இன்னொரு தானமும் கேட்கிறாரே! மனிதனுக்குத்தான் எவ்வளவு ஆசை என்று எண்ணினார்.

வெங்கடசாமி சிரித்தவாறே "இன்னொரு தானம் என்னவென்று சொல்லுங்கள்" என்றார். உடனே புரோகிதரும் "அது உழைப்பு என்னும் தானம். நீங்கள் விவசாயத்தில் தேர்ந்தவர். எனவே இவரது உழைப்போடு இந்த நிலத்தை தந்தால் ஏற்கிறேன். இவர் யாருக்கும் இல்லை எனாது கொடுப்பவர். அதனால் இவரது உழைப்பு எனக்குக் கிடைத்தால் இந்த பூமியில் பயிர் செய்து பயன் பெறுவேன். நிலம் இவர் பெயரிலேயே இருக்கட்டும். நான் பூதானம் ஏற்றுக் கொண்டதாகக் கூறிவிடுகிறேன். இதில் இவரது உழைப்பால் கிடைக்கும் விளைச்சலில் நான்கில் ஒரு பங்கு மட்டும் எனக்குக் கொடுத்தால் போதும்" என்றார்.

கணக்குப் பிள்ளையும் "புரோகிதரே! நீர் நன்கு யோசித்துத்தான் கூறினீர். நீர் கேட்கும் உழைப்பை இவர் தானமாகக் கொடுக்க மறுக்க மாட்டார். அப்படித்தானே!" என்று வெங்கடசாமியைப் பார்த்துக் கேட்டார்.

வெங்கடசாமியும் "என்னிடம் யார் எதைக் கேட்டாலும் நான் கொடுத்து விடுவேன். இவர் என் உழைப்பை தானமாகக் கேட்கிறார். தாராளமாகக் கொடுக்கிறேன்" என்றார்.

வெங்கடசாமி புரோகிதருக்கு நிறைய கொடுக்க வேண்டும் என்பதற்காக அந்த நிலத்தில் நன்கு பாடுபட்டு அமோக விளைச்சலை உண்டாக்கித் தன் தானம் கொடுக்கும் இயல்பை மேலும் சிறப்படையச் செய்தார்.



## ஈக்களா? எறும்புகளா?



டெக்சாஸ் மக்களுக்கு எறும்புகளால் பெரும் பிரச்னை ஏற்பட்டுள்ளது. அவற்றிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ள பல வழிகள் செய்தும் பயனில்லாது போயிற்று. என்ன மருந்து தெளித்தும் அவை போக வில்லை. இந்த எறும்புகளின் தொல்லை தாங்க முடியாமல் அவர்களுக்குத் தம் வீடுகளை விட்டு வெளியேறிவிட வேண்டிய நிலைகூட ஏற்பட்டது. முடிவில் டெக்சாஸ் பல் கலைக் கழகத்தைச் சேர்ந்த சில விஞ்ஞானிகள் பிரேஜிலிலிருந்து ஒருவகை ஈக்களைக் கொண்டு வந்து எறும்புகளின் மீது ஏவினார்கள். அந்த ஈக்கள் எறும்புகளின் தலைமீது முட்டையிட்டு அதிலிருந்து வரும் லார்வாவைக் கொண்டு அவற்றின் தலைகளைத் தின்னச் செய்தன. இவ்வாறு எறும்புப் பிரச்னை தீர்க்கப்பட்டது.



## வாக்கு தவறவில்லை!

தொலைக்காட்சியில் குழந்தைகளின் படிப்பு கெடுகிறது என்று பலர் கூறுவது தெரிந்ததே. இது உண்மைதான். அமெரிக்காவில் ஆர்.ஐ.எப். என்ற அமைப்பு குழந்தைகளைப் படிப்பில் அக்கரை கொள்ள ஒரு திட்டம் தீட்டியுள்ளது. குழந்தைகள் விரும்பும் புத்தகத்தை கொடுத்து ஷெர்லிராடோவைச் சேர்ந்த ஒரு பள்ளித் தலைமை ஆசிரியை அதை அவர்கள் முழுவதும் படித்தால்தான் ஒரு மண்ணுண்ணிப் பாம்பை சாப்பிட்டுக் காட்டுவதாகக் கூறினார். குழந்தைகள் அப்புத்தகத்தை இருமுறை படித்துவிட்டு ஆசிரியையிடம் கூறவே அந்த ஆசிரியையும் ஆரஞ்சு பழ ரசத்தில் இரண்டு மண்ணுண்ணிப் பாம்புகளைப் போட்டு மடக்கெனக் குடித்து அவற்றை விழுங்கிக் காட்டினாராம்.



# காதில் விழாதது!

கங்காதரன் தன் ஊரிலிருந்து கிளம்பி முப்பது மைல் தொலைவிலுள்ள தன் மாமனார் ஊருக்குப் போய்க் கொண்டிருந்தான். உச்சி வேளைக்கு அவன் நல்லூரை அடைந்த போது அவனுக்கு ஒரே பசியும் தாகமுமாக இருந்தது. அதனால் ஒரு வீட்டை அடைந்து அங்கு திண்ணையில் உட்கார்ந்திருந்த இளைஞனிடம் "தம்பீ! வெகுதூரம் நடந்து களைத்து வந்திருக்கிறேன். அயலூரானான எனக்கு ஏதாவது சாப்பிடக் கொடுத்தால் புண்ணியம் உண்டு" என்று கேட்டான்.

அந்த வீட்டில் உள்ளவர்களெல்லாம் பீரங்கிச் செவிடு. அது கங்காதரனுக்குத் தெரியாது. அவன் கூறியதைக் கேட்டு அந்த வாலிபன் சட்டென எழுந்து உள்ளே சென்றான்.

அவன் தன் தங்கையிடம் "இதோ பார். வாசலில் யாரோ ஒரு தடியன் வந்து உன்னை கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறிக் கொண்டிருக்கிறான். இப்போது இந்த விஷயம் ஊர் முழுவதும் பரவப் போகிறது. இது வெளியில் தெரிந்தால் நமக்குத்தானே அவமானம்" என்று கத்தினான்.

அந்தப் பெண் தன் தந்தையிடம் போய் "பாரப்பா இந்த அண்ணனை! எனக்கு இந்த வீட்டில் பங்கு கிடையாது என்கிறான். இப்போது பெண்களுக்கும் சொத்துரிமை உண்டு என்ற சட்டம் வந்திருக்கிறது. இது அவனுக்குத் தெரியாது போலிருக்கிறது. இவன் யார் எனக்கு இந்த வீட்டில் பங்கு இல்லை என்று சொல்ல? நான் விட மாட்டேன். நீதிமன்றம் வரை போவேன்" என்றாள்.

அவளது தந்தை உடனே கொல்லைப்புறத்திற்குப் போய் அங்கு தண்ணீர் இறைத்துக் கொண்

- எஸ். சோபினி -

டிருந்த தன் மனைவியிடம் "நீ இன்று சமையல் செய்யப் போவதில்லை என்று உன் மகளிடம் சொன்னாயாமே. என்னால் பட்டினி கிடக்க முடியாது. போய் சமையலை முதலில் கவனி" என்று விரட்டினான்.

அவள் வீட்டிற்குள் போய் உட்கார்ந்திருந்த தன் மாமியாரிடம் "நீங்கள் உங்கள் மகனுக்கு இந்த ஐம்பது வயதில் இன்னொரு கல்யாணம் செய்து வைத்து விட்டு என்னை விலக்கியா வைக்கப் போகிறீர்கள்? இது என்ன அநியாயம்! நான் உயிரோடு இருக்க என் கணவருக்கு இன்னொரு மனைவியா? அது நடக்காது. நான் ஊரையே கூட்டிப் பஞ்சாயத்து கேட்பேன். அப்போது உங்கள் மானம் கப்பலேறி விடும். தெரிந்ததா?" என்று கத்தினாள்.

அந்தக் கிழவியும் "என்ன சொன்னாய்? என்னையா வீட்டை விட்டுப் போகச் சொல்கிறாய்? முடியாது. இது என் கணவன் வீடு. அவரும் அவருடைய முன்னோர்களும் வாழ்ந்த வீடு. இது சுற்றுப் பக்கத்து கிராமத்தவர்களுக்கு எல்லாம் தெரியும். நேற்று வந்த நீ என்னையா வெளியே போகச் சொல்கிறாய். வா. இப்போதே பஞ்சாயத்துக் கூட்டி முடிவு காணலாம்" என்று எழுந்தாள்.

கிழவியின் பின்னால் அவள் மருமகள், மகன், பேத்தி, பேரன் என்று யாவரும் வீட்டிலிருந்து வெளியே வாசலுக்கு வந்தார்கள்.



அப்போது திண்ணையில் உட்கார்ந் திருந்த கங்காரன் "அடடா! என்னைச் சாப்பாட்டிற்கு அழைத்துப் போக இவ்வளவு பேர் வந்திருக்கிறீர்களே. ஒருவர் வந்தாலே போதுமே. நான் வந்திருப்பேனே. இந்த ஊரின் பெய ருக்கு ஏற்றபடி நீங்கள் எல்லோருமே நல்லவர்களாகத்தான் இருக்கிறீர்கள்" என்றான்.

அப்போது கிழவியின் மகன் "நீ யாரய்யா நியாயம் சொல்ல? நாங்கள் ஒரே குடும்பத்தவர். இன்று சண்டை போட்டுக் கொள்வோம். நாளை சமாதானமாக போய் விடுவோம். எங்களுக்குள் ஆயிரம் இருக்கும். அதைக் கேட்க நீ யார்? உன்னை இங்கே யாரும் கூப்பிடவில்லையே. மரியாதையாகப் போய்விடு. இல்லா விட்டால் நடப்பதே வேறு. தெரி கிறதா?" என்று அதட்டினான்.

அப்போது கங்காதரன் "என்ன ஐயா இது! அநியாயமாக இருக்கிறது! நான் பசியாயிருக்கிறது. சாப்பாடு கிடைக்குமா என்று கேட்டதற்கு தண் டனையா இது? ஒருவேளை சாப் பாட்டிற்குப் பதினைந்து ரூபாயா? பகல் கொள்ளையாக இருக்கிறதே. உங்கள் சாப்பாடும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம். நான் வேறு எங்காவது போய்ச் சாப்பிட்டுக் கொள்கிறேன் இப்படி ஒரு பகல் கொள்ளையை நான் எங்குமே பார்த் தது இல்லை" என்று கூறி எழுந்து ஓடினான்.

கிழவியின் மகனோ "என்ன இது! நான் இவ்வளவு சொன்னேன். எதை யும் காதில் போட்டுக் கொள்ளாமல் எழுந்து ஓடிப் போய் விட்டானே. அவனுக்குக் காதே கேட்காது போலி ருக்கிறதே. ஒருவேளை அவன் முழுச் செவிடா?" என்று உரக்கக் கூவி னான்.

உண்மை அதுதான். அந்தக் குடும்பத்தவர் எல்லோரையும் போல கங்காதரனுக்கும் காது கேட்காது தான். அதனால்தான் அவனும் அப்ப டிப் பேசிவிட்டு அங்கிருந்து ஓடிப் போனான்!






நைமிசாரண்யத்தில் இருந்த ரிஷிகளுக்குக் குலபதியாக சௌனகர் இருந்தார். அவர் ஒருமுறை பனிரெண்டு ஆண்டுகள் காலம் செய்யப் படும் சத்ரயாகத்தை செய்தார். பல பெரிய பெரிய ரிஷிகள் சேர்ந்து அந்த யாகத்தைச் செய்து கொண்டிருக்கையில் அங்கு ரோமஹர்ஷரின் மகனான உக்கிரசிரவஸ் எனப்படும் சூதர் வந்தார். சூதருக்குத் தெரியாத புண்ணியசரிதங்களே இல்லை எனலாம்.

சூதரைக் கண்டதும் முனிவர்கள் யாவரும் அவரைச் சூழ்ந்து கொண்டு "நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? உங்களிடமிருந்து பல நல்ல கதைகளைக் கேட்க விரும்புகிறோம்" என்றார்கள்.

சூதரும் "ரிஷிகளே! பரீட்சித்து மன்னனின் மகன் ஜெனமேஜெயன் சர்ப்பயாகம் ஒன்றைச் செய்தான். அப்போது வைசம்பாயனர் அற்புதமான பாரதக் கதைகளைக் கூறினார். அவற்றை எழுதியவர் வைசம்பாயனரின் குருவான வேதவியாசர். நான் அக்கதைகளைக் கேட்டுவிட்டு போர் நடந்த சியமந்தக பஞ்சமம் எனப்படும் புண்ணிய க்ஷேத்திரத்தை தரிசித்துவிட்டு இங்கு வந்திருக்கிறேன்" என்றார்.

அப்போது சௌனகரும் மற்ற முனிவர்களும் தமக்கு அந்த அற்புத கதைகளைக் கூறுமாறு சூதரிடம் வேண்டினார்கள். சூதரும் சொல்ல

- பரீட்சித்து சாபம் -



லானார்!

"மகாபாரதம் எப்படி எழுதப் பட்டது தெரியுமா? கிருஷ்ணதுவைபா யனர் எனப்படும் வியாசர் வேதங் களை நான்கு பகுதிகளாக அமைத்த பின் இமயமலைக்குப் போய் சிறிது காலம் தவம் செய்தார். திருதராஷ்டி ரனின் குடும்பத்தவர் எல்லாம் இறந்து போனதும் அவர் பாரதம் எழுதுவது பற்றி யோசித்தார். அப் படி எழுதப்படுவது உலகிற்குப் பயனளிக்கக் கூடியதாக இருக்க வேண்டும் என அவர் நினைத்தார். அப்போது அவரைக் காணவந்த பிரம்மாவிடம் அவர் தாம் பாரதம் இயற்றப் போவது பற்றிக் கூறி அதை ஜனரஞ்சகமாக எழுத யாரு டைய உதவியை நாடலாம் என்று கேட்டார்.

அதற்கு பிரம்மாவும் "இதற்கு நீ விநாயகரை வேண்டிக் கொள். அவரை எழுதச் சொல். உன் முயற்சி வெற்றி பெறும்" என்று கூறிவிட்டுச் சென்றார். வியாசரும் விநாயகரை தியானித்தார். அவரும் வியாசர் முன் தோன்றவே அவரிடம் வியாசர் "நான் மகா பாரதத்தைச் சொல்லச் சொல்ல தாங்கள் அதை எழுதிக் கொடுக்க வேண்டும்" என்று வேண்டினார். விநாயகரும் அதற்கு இசைந்தார்.

வியாசரின் பாரதத்தை தேவலோ கத்தில் நாரதரும், பித்ரு லோகத்தில் அசிதரும், கந்தர்வ லோகத்தில் சுகரும் கூறிப் பரப்பினார்கள். ஜெனமேஜெயன் செய்த சர்ப்பயாகத் தின் போது வைசம்பாயனர் கூறி அதனை பூலோகத்தில் பரப்பினார்.

அப்போது சௌனகர் "போர் நடந்த இடத்திற்குச் சியமந்தக பஞ்ச மம் என்று ஏன் பெயர் வந்தது?" என்று கேட்டார். சூதர் அதுபற்றி விவரமாகக் கூறலானார்.

"திரேதாயுக முடிவிலும் துவா பரயுக ஆரம்பத்திலும் க்ஷத்திரிய மன்னர்கள் கர்வம் கொண்டு அக்கிர மங்களைச் செய்தனர். பரசுராமர் அந்த அரசர்களைத் தேடித் தேடி இருபத்தோரு முறை கொன்று அவர்களது ரத்தத்தை ஐந்து மடுக் களில் நிரப்பி அவற்றைப் பித்ரு

தேவதைகளுக்கு அர்ப்பணித்தார். அவர்கள் அதனால் மகிழ்ந்து அந்த ஐந்து மடுக்களும் புனித தீர்த்தங்களாகட்டும் என்று வரம் அளித்தார்கள். அந்த இடத்தில்தான் பயங்கர மகாபாரதப் போர் நடந்தது. அதனால் இதற்கு குருக்ஷேத்திரம் என்ற பெயர் ஏற்பட்டது." என்றார்.

பரீட்சித்தின் மகனான ஜெனமேஜெயன் நீண்ட சத்ரயாகத்தை இந்தக் குருக்ஷேத்திரத்தில் செய்து கொண்டிருந்தான். அவனது தம்பிகளான சுருதசேனன், உக்கிரசேனன், பீமசேனன் உடன் இருந்தார்கள். அப்போது சாரமேயன் என்ற தேவலோக நாய் யாகசாலைக்குள் நுழைந்து திரியவே ஜெனமேஜெயனின் தம்பிகள் அதனை அடித்து விரட்டினார்கள். சாரமேயன் தன் தாயான சரமாவிடம் போய் முறையிடவே அவளும் "சாதுக்களையும் ஏழைகளையும் துன்புறுத்தியவர்களுக்கு கெடுதலே ஏற்படும்" என்று கூறித் திட்டினாள்.

சரமாவின் வசைவுகள் சாபமாகி விடுமோ என பயந்த ஜெனமே ஜெயன் ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சாந்தி ஹோமம் செய்ய யாராவது புரோகிதர் கிடைப்பாரா என்ற தேடலானான்.

ஒருமுறை ஜெனமேஜெயன் காட்டில் வேட்டைக்குப் போய் சுருதஸ்வரரின் ஆசிரமத்தை அடைந்தான். அவருக்கு சோமஸ்ரவஸ் என்ற மகன் இருப்பது கண்டு அந்த



மகனைத் தனக்குப் புரோகிதராக அனுப்ப முடியுமா என்று கேட்டான்.

சுருதஸ்ரவரும் "என் மகன் பிராம்மணர்கள் எதைக் கேட்டாலும் கொடுத்து விடுவான். அவனது விருப்பத்தை உன்னால் நிறைவேற்ற முடியுமானால் நீ அவனை அழைத்துச் செல்லலாம்" என்று கூறினார். அதற்கு ஜெனமேஜெயன் இணங்கி சோமஸ்ரவனை ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்துக் கொண்டு போய்ப் பல யாகங்களைச் செய்தான்.

ஒருநாள் ஜெனமேஜெயனைக் காண உத்தங்கர் என்ற ரிஷி வந்தார். அவர் "மன்னா! நீ சர்ப்பயாகம் செய்தேயாக வேண்டும். ஏனென்றால் உன் தந்தையைக் கொன்றவன்



கொடிய தட்சகன் என்ற பாம்பு. உன் தந்தையைக் காப்பாற்ற வந்த காஸ்யபனை அவன் பணத்தாசை காட்டி விரட்டிய கிராதகன். அதனால் அந்த தட்சகன் உன் சர்ப்ப யாகத்தில் விழுந்து சாக வேண்டும்" என்றார்.

உத்தங்கர் தட்சகன் மீது ஆத்திரம் கொள்ளக் காரணம் இருந்தது. அவர் தன் குருதட்சணையாக என்ன கொடுக்க வேண்டும் என்று தம் குருவைக் கேட்டார். அவரோ "எனக்கு எதுவும் வேண்டாம். என் மனைவி விரும்புவதைக் கொடுத்தால் அதுவே எனக்குச் செலுத்தும் குரு தட்சணை" என்றார். உத்தங்கனும் குருபத்தினியை அணுகி அவளது விருப்பம் என்ன என்று கேட்கவே அவளும் "நான் ஒரு விரதத்தை இன்னமும் நான்கு நாட்களுக்குள் முடிக்க வேண்டும். அதற்குப் பௌஷ்ய மன்னனின் மனைவியிடமுள்ள குண்டலங்கள் தேவை" என்றாள். குருவின் மனைவி கேட்ட குண்டலங்களை நான்கு நாட்களில் கொண்டு வந்து கொடுப்பதாகச் சொல்லி அவர் சென்றார். அக்குண்டலங்கள் பௌஷ்ய மன்னனின் மனைவியிடம் இருந்தன. உத்தங்கர் அதை அவளிடம் கேட்டு வாங்கிக் கொண்டு தன் குருவின் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

தட்சகன் அக்குண்டலங்களின் மீது கண் வைத்திருந்தான். உத்தங்கர் குண்டலங்களை வாங்கிச் செல்கிறார் என அறிந்து அவன் அவரைப் பின் தொடர்ந்தான். உத்தங்கர் வழியில் ஒரு குளத்தில் குளிப்பதற்குமுன் கரையில் குண்டலங்களை வைத்து விட்டு நீரில் இறங்கினார். அப்போது தட்சகன் குண்டலங்களைத் திருடிக் கொண்டு ஓடலானான்.

உத்தங்கர் இடுப்பிலிருந்த துண்டோடு கரைக்கு ஓடி வந்து தட்சகனைத் துரத்தினார். அவன் பாம்பாக மாறி ஒரு வளைக்குள் புகுந்தான். உத்தங்கர் ஒரு தடியைக் கொண்டு அந்த வளையைப் பெரிதாக்கி அதன் வழியே சென்று பாதாள லோகத்தை அடைந்தார். அங்கு ஒரு குதிரை மீது ஒருவன்

இருந்ததைக் கண்டார். அக்குதிரை அக்கினி. அதன் மீது இருந்தவன் இந்திரன்.

உத்தங்கரைப் பார்த்த இந்திரன் "உமக்கு என்ன வேண்டும்?" என்று கேட்கவே அவரும் "இந்த நாகலோகம் என் வசமாக வேண்டும்" என்றார். மறுநிமிடமே அக்குதிரையிலிருந்து அக்கினிச் சுவாலை கிளம்பி நாகலோகத்தையே எரிக்கலாயிற்று. இதனால் நாகலோகமே அழிந்து விடுமோ என பயந்து போன தட்சகன் குண்டலங்களைக் கொண்டு வந்து கொடுத்தான். உத்தங்கரும் அதனை உரிய நேரத்தில் தன் குரு பத்தினியிடம் கொண்டு போய்க் கொடுத்தார்.

தன்னை இவ்வளவு கஷ்டப்படுத்தினானே என்று தட்சகன் மீது உத்தங்கருக்கு கடுங் கோபம் இருந்தது. அதனால் ஜெனமேஜெயனைக் கொண்டு அவர் தட்சகனை ஒழிக்க எண்ணினார்.

ஜெனமேஜெயன் உத்தங்கரிடம் "இந்தத் தட்சகன் ஏன் என் தந்தையைக் கொன்றான்?" என்று கேட்கவே, அவனது மந்திரிகள் பரீட்சித்து மன்னன் இறந்தது எப்படி என்று விவரமாகக் கூறினார்கள்.

பரீட்சித்து மன்னன் அபிமன்யுவுக்கும் உத்தரைக்கும் பிறந்தவன். அவன் பாண்டவர்களுக்குப் பின் மன்னனாகி ஆட்சி புரிந்து வந்தான். அவன் ஒருமுறை காட்டில் வேட்டையாடப் போய் ஒரு மிருகத்தைத் துரத்திக் கொண்டு ஓடினான். அது



தப்பி மறைந்தது. அப்போது சமிகர் என்ற முனிவர் ஓரிடத்தில் தவம் செய்து கொண்டிருந்தார்.

அவரிடம் பரீட்சித்து மன்னன் "இவ்வழியாக ஒரு மிருகம் ஓடியதா?" என்று கேட்டான். அவர் பதில் சொல்லாமல் இருக்கவே மன்னனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் சுற்றிலும் பார்த்தான். ஒரு செத்த பாம்பு கிடந்தது. அதைத் தன் வில்லின் நுனியால் எடுத்து அம்முனிவரின் கழுத்தில் மாலை போலப் போட்டு விட்டு அங்கிருந்து சென்றான்.

இதற்குச் சற்று நேரத்திற்குப் பின் சமீகரின் மகன் சிருங்கி தன் தந்தையைக் காண வந்தான். அவனும் தவம் செய்து முனிவரானவன். தன் ஞான திருஷ்டியால் சிருங்கிக்கு அந்த அடாத செயலைப் பரீட்சித்துதான் செய்தான் என்று தெரிய வந்தது. அவன் உடனே "இன்றையிலிருந்து ஏழாவது நாள் பரீட்சித்தை தட்சகன் தீண்ட இறந்து போவான்" எனச் சபித்தான். சமீகருக்குத் தன் மகன் பரீட்சித்துக்குக் கொடுத்த சாபம் தெரிந்தது. அவர் கோரமுகன் என்ற தன் சீடனை பரீட்சித்துவிடம் அனுப்பி தட்சகனிடமிருந்து தப்ப வழி செய்து கொள்ளுமாறு எச்சரித்தார்.

பரீட்சித்து தன் செய்கைக்கு வருந்தி சிருங்கியின் சாபத்திற்கு பயந்தான். அந்த சாபத்திலிருந்து தப்ப ஒருவழி சொல்லுமாறு அவன் தன் மந்திரிகளிடம் யோசனை கேட்டான். அவர்கள் ஒரு ஒற்றைக் கம்பத்தின் மீது வசிக்க வீடு அமைத்து அதில் வெளிக்காற்று கூடப் புகாத படி எல்லாப் பக்கத்தையும் அடைத்து விட்டார்கள். விஷத்திற்கு மாற்றாகப் பல மருந்துகளையும் அங்கு தயாராக வைத்திருந்தார்கள். விஷத்தைப் போக்க வைத்தியர்களும் மந்திரவாதிகளும் அங்கு தயாராக இருந்தனர்.



மன்னனும் மந்திரிகளும் அந்தக் கம்பத்து மேல் வீட்டில் இருக்கலானார்கள். ஆறு நாட்கள் எவ்வித சம்பவமும் இல்லாமல் கழிந்தன. ஏழாவது நாள் காஸ்யபன் என்ற பிராம்மணர் பரீட்சித்துக்குக் கொடுக்கப்

பட்ட சாபத்தைப் பற்றி கேள்விப்பட்டார். பரீட்சித்தை தட்சகன் கடித்தால் உடனே விஷத்தை இறக்க நிறைய பணம் பெறலாம் என்ற ஆசையோடு அவர் வந்து கொண்டிருந்தார்.

தட்சகனும் பரீட்சித்துவைத் தீண்ட வந்து கொண்டிருந்தான். அந்தண வேஷத்தில் வந்த அவன் வழியில் காஸ்யபரைச் சந்தித்து பேசி அவர் எங்கு போகிறார் என்று தெரிந்து கொண்டான். அவரும் "தன்னால் எப்பேர்ப்பட்ட கொடிய பாம்பின் விஷத்தையும் போக்கிவிட முடியும்" என்றார்.

அப்போது அவன் "நான் தட்சகன். என் விஷத்தால் யாருமே சாம்பலாகி விடுவார்கள். உன் மந்திரம் என் விஷத்தை ஒன்றும் செய்ய முடியாது. நீ வந்த வழியே போய் விடு" என்றான்.

காஸ்யபரோ "நம் சக்தியைப் பரீட்சிக்கலாம்" என்றார். எனவே தட்சகன் ஒரு ஆலமரத்தை தன் பற்களால் தீண்டினான். அந்த மரம் கருகிச் சாம்பலாயிற்று. காஸ்யபர் தம் மந்திரத்தால் மீண்டும் அதைப் பசுமை மிக்க மரமாக்கினார்.

அப்போது தட்சகன் "முனிகுமாரன் சாபம் பலித்தே ஆக வேண்டும். நான் உமக்கு மன்னன் கொடுப்பதை விட அதிகப் பணம் கொடுக்கிறேன்" என்று ஆசை காட்டவே காஸ்யபர் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு திரும்பிச் சென்றார்.

தட்சகன் சில நாகர்களை முனிகுமாரர்களாக்கி அவர்களைப் பரீட்சித்துவிடம் அனுப்பினான். அவர்கள் பழங்களையும் மலர்களையும் எடுத்துக் கொண்டு பரீட்சித்தைக் காணச் சென்றனர். அவர்கள் கொண்டு வந்த பழங்களில் ஒன்றை எடுத்து பரீட்சித்து உரித்தான். அதில் ஒரு புழு இருந்ததை அவன் கண்டான். மறுநிமிடமே அந்தப் புழு தட்சகனாகி பரீட்சித்துவைக் கடிக்கவே பரீட்சித்து எரிந்து சாம்பலானான். அவன் கட்டிய கம்பமும் வீடும் கூடச் சாம்பலாகி விட்டது.





# கல்மனம் கரைந்ததே!

சாகரபுரி இளவரசி சந்திரிகா மிக அழகானவள். ஒருமுறை அவள் அண்டை நாட்டிற்கு விருந்தாளியாகச் சென்றாள். அவளை அந்நாட்டு இளவரசன் ஜெயசேனன் வரவேற்றுப் பல இடங்களைச் சுற்றிக் காண்பித்தான். இதனால் இருவரும் நெருங்கிப் பழகி ஒருவரை மற்றவர் நேசிக்கலானார்கள்.

சந்திரிகா தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றாள். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு சந்திரிகாவிற்கு சுயம்வரம் என்று ஜெயசேனனுக்கு அழைப்பு கிடைத்தது. அவன் சாகரபுரிக்குப் போக எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருக்கையில் பல்லூகன் என்ற ராட்சஸன் சந்திரிகாவை கவர்ந்து கொண்டு போய்விட்டான் என்ற தகவல் கிடைத்தது.

பல்லூகன் கொடியவன். பல மிக்கவன். மந்திர தந்திரங்களில் தேர்ந்தவன். அவன் இருப்பது பல்லூகவனம். அந்தக் காட்டிற்குள் போனவர்கள் உயிருடன் திரும்பி வந்ததே இல்லை. அந்தக் காட்டினுள்தான் சந்திரிகாவை பல்லூகன் சிறை வைத்தான்.

சந்திரிகாவின் தந்தை இதனால் கவலையில் ஆழ்ந்து நோயுற்றார். ஜெயசேனனோ சந்திரிகாவின் மீது கொண்ட ஆசையில் பல்லூகனை எதிர்த்துப் போராடி அவளை மீட்டு வருவது என்று உறுதி கொண்டான். அவனை அவனது தாய் தந்தையர் தடுத்தும் கேளாமல் அவன் பல்லூகவனத்திற்குச் சென்றான்.

அந்தக் காடு ஆரம்பமாகும் இடத்தில் சில அரச குமாரர்களை அவன் கண்டான். அவர்களும் சந்திரிகாவை பல்லூகனிடமிருந்து விடுவிக்க வந்தவர்கள்தானாம். அவர்களை பல்

-பாபநாசம் சாமா-



கள்.

அவர்கள் ஜெயசேனனிடம் "நீ திரும்பி போய்விடு. பல்லூகனை எதிர்க்க யாராலும் முடியாது. சந்திரிகாவையும் மறந்துவிடு" என்று சொன்னார்கள்.

அது கேட்டு ஜெயசேனன் "நான் திரும்பிப் போவதென்றால் சந்திரிகாவுடன் தான் போவேன். அவள் இல்லாமல் எனக்கு வாழ்வே இல்லை. அதனால் காட்டிற்குள் போய் ராட்சஸனை எதிர்க்கத்தான் போகிறேன்" என்று கூறி பல்லூகவனத்திற்குள் சென்றான்.

அக்காடு அடர்ந்த மரங்களாலும் முட் புதர்களாலும் நிறைந்திருந்தது. ஜெயசேனன் கொஞ்ச தூரம் போனதுமே யாரோ அவன் கண்களை அவன் பின்னாலிருந்து பொத்தினார்கள். ஜெயசேனன் திணறித் திரும்பிப் பார்த்தபோது ஒரு பயங்கர ராட்சஸனை அங்கு கண்டான். அவன் கண்கள் நெருப்புத் தனல் போலிருந்தது. தலை முடியோ முட்புதர் போலிருந்தது.

அவன் "நான் தான் பல்லூகன். காட்டுக்கு வெளியே இருந்த அரசகுமாரர்கள் உன்னை எச்சரிக்கவில்லையா? அதைக் கேட்டு நீ பயப்பட்டுவிடவில்லை போலிருக்கிறதே. நீ துணிச்சலுடன் இக்காட்டிற்குள் வந்திருக்கிறாய். அதற்காக உன்னைப் பாராட்டுகிறேன். என்னைக் கொன்றுவிட முடியும் என்றா நீ நினைக்கி

லூகன் வெகு எளிதாகப் பிடித்து பல்லிகளாகவும் தவளைகளாகவும் கொக்குகளாகவும் மாற்றி 'நீங்களெல்லாம் இப்போதே கிளம்பி இக் காட்டைக் கடந்து போய் விட்டால் உங்கள் சுய உருவை அடைவீர்கள். இல்லாவிட்டால் இதே உருவில் இங்கே திரிந்து பல கஷ்டங்களை அனுபவிப்பீர்கள்" எனக் கூறினானாம். எல்லோரும் உடனே கிளம்பினர். சிலர் பாம்புகளுக்கும் வேறு சிலர் கொடிய மிருகங்களுக்கும் இரையாகினர். ஒரு சிலரே காட்டைக் கடந்து வந்து முன் போல அரசகுமாரர்களானார்கள். அவர்கள் அங்கேயே இருந்து வேறு அரச குமாரர்கள் சந்திரிகாவிற்காக வந்தால் எச்சரிக்கலானார்

றாய்?" என்று கேட்டான்.

ஜெயசேனனும் "நான் உன்னைக் கொல்ல வேண்டும் என்று வரவில்லை. என் சந்திரிகாவை அடையவே வந்திருக்கிறேன்" என்றான். பல்லூகனும் "இந்த உன் ஆசை உன் உயிரையே வாங்கி விடும். பேசாமல் இங்கிருந்து போய்விடு. உன்னை நான் ஒன்றும் செய்ய மாட்டேன்" என்றான்.

ஜெயசேனனோ "என் சந்திரிகா இல்லாமல் இங்கிருந்து நான் போகமாட்டேன். என் உயிர் போவதைப் பற்றிக் கவலை இல்லை" என்றான். பல்லூகன் அவனைப் பாராட்டுபவன் போலப் பார்த்து "அப்படியானால் சந்திரிகாவை நீ அடைய ஒரு வழி சொல்கிறேன். அதற்கு நீ தளதளவெனக் கொதிக்கும் எண்ணெயில் குளிக்க வேண்டும். அதற்குத் தயாரா? இல்லையென்றால் உன்னை ஒரு தவளையாக மாற்றி விடுவேன். நீயும் ஏதாவது ஒரு பாம்பிற்கு இரையாகி விடுவாய். ஒருவேளை நீ தப்பி இந்தக் காட்டிற்கு வெளியே போய் விட்டால் உன் சுய உருவத்தை நீ அடைந்து விடுவாய். என்ன செய்யப் போகிறாய். சொல்" என்று கேட்டான்.

ஜெயசேனனோ "நான் கொதிக்கும் எண்ணெயில் குளிக்கத் தயார்" என்று பயப்படாமல் கூறினான். பல்லூகன் அவனை தன் உள்ளங்கையில் எடுத்துக் கொண்டு கிளம்பிச் சென்றான். ஓரிடத்தில் ஒரு கால்வாய் அடுப்பின் மீது கல்லாலான குழி





வான பெரிய சட்டி வைக்கப்பட்டிருந்தது. அதில் எண்ணெய் 'தள தள'வெனக் கொதித்துக் கொண்டிருந்தது.

பல்லூகன் அதை ஜெயசேனனுக்குக் காட்டி "மறுபடியும் நன்றாக யோசி. உன்னால் இதில் குளிக்க முடியுமா?" என்று கேட்டான். அவனோ "நான்தான் சந்திரிகாவை அடைய எதையும் செய்யத் தயார் என்று சொல்லி விட்டேனே இதைப் போல ஆயிரம் எண்ணைய்க் கொப்பறைகளில் மூழ்கிக் குளிக்க வேண்டும் என்றாலும் அதற்குத் தயார்" என்றான். ராட்சஸன் அவனைப் பொத்தென்று அதனுள் போட்டான். அதில் விழுந்த ஜெயசேனனின் உடல் பொரிந்து போயிற்று. அவன் ஆவென அலறினான். அவன் குறுகிய மிளகாய் வத்தல் போலாகி எண்ணெயின் மேல் மட்டத்தில் மிதந்தான். அப்போது பல்லூகன் ஏதே ஒரு மந்திரத்தை உச்சரிக்கவே கால்வாய் அடுப்பு, கல்சட்டி எல்லாம் மறைந்து போயின. ஜெயசேனன் முன்போலாகி ராட்சஸன் முன் இருந்தான்.

பல்லூகன் திருப்தி அடைந்தவனாக "நீ இறக்கவில்லை. ஆனால் இந்த மாதிரிக் குளியல் நீ மூன்று நாள் தொடர்ந்து செய்தாலே நீ சந்திரிகாவை அடையும் வழியைச் சொல்வேன். சம்மதமா?" எனக் கேட்டான்.

ஜெயசேனனும் "என் சந்திரிகாவை அடைய மூன்று தடவை என்ன முப்பதாயிரம தடவை கூட இப்படிக் குளிக்க நான் தயார்" என்றான். அதைக் கேட்ட பல்லூகன் "சபாஷ் இதுவரை எந்த அரசகுமாரனும் செய்யாத செய்லை நீ செய்திருக்கிறாய். உன் ஆசை இவ்வளவு புனிதமானதா! சரி நான் உனக்கு இப்போது சந்திரிகா எப்படிக் கிடைப்பாள் என்று கூறிகிறேன். கவனமாகக் கேள்" என்றான்.

ஜெயசேனனும் பல்லூகன் சொல்வதை கேட்கலானான். பல்லூகனும் "இந்தக் காட்டில் வேறொரு இடத்தில் முள்ளுகி என்னும் ராட்சஸி இருக்கிறாள். அவள் பலத்திலும்

சரி சக்தியிலும் சரி எனக்குச் சமமான வள். அவளிடம் மந்திரக் குங்குமம் இருக்கிறது. அதை எடுத்து வந்து என்னிடம் கொடுத்தால் நான் சந்திரி காவை உன்னிடம் ஒப்படைப்பேன்" என்றான்.

அப்போது ஜெயசேனன் "அந்தக் குங்குமத்தின் சக்திதான் என்ன?" என்று கேட்கவே பல்லூகனும் "என் னிடம் மந்திர சக்தி வாய்ந்த குங்குமச் சிமிழ் ஒன்று உள்ளது. அதில் அந்த குங்குமத்தைப் போட்டு வைத் துக் கொண்டால் உலகின் எந்த சக்தியாலும் என்னை ஒன்றும் செய்ய முடியாது. அந்த முள்ளுகியும் எனக்கு அடங்கிப் போவாள். ஆனால் அவளிடமிருந்து அக்குங்குமத்தை எடுத்து வருவது எளிதல்ல. அவள் வசிக்கும் இடத்திற்குப் போவதே கடினம். கொதிக்கும் எண்ணெயில் குளித்த ஒருவனால்தான் அங்கு போக முடியும். பல சக்திகளை யுடைய நான் கூட இந்த எண்ணெய்க் குளியலைச் செய்யத் துணியவில்லை. இதை யாராவது செய்வானா என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். அதற் காகவே சந்திரிகாவைக் கவர்ந்து வந்து அவளை விடுவிக்க யாராவது சக்தியுள்ள வீரன் வருவானா எனப் பார்த்தேன். நீ கிடைத்தாய். சரி. நீ முள்ளுகி இருக்கும் இடத்திற்குப் போய் அந்தக் குங்குமத்தை எடுத்து வருகிறாயா?" என்று கேட்டான்.

ஜெயசேனனும் "ஆகா. போகி றேன்" எனவே பல்லூகனும் "இர வில் அவள் அழகிய பெண்ணாக





மாறிப் படுத்துத் தூங்குவாள். அச்சமயத்தில் உன்னை நான் அவளது படுக்கை அறையில் கொண்டுபோய் விட்டு விடுகிறேன். நான் ஒரு மூலிகையைக் கொடுக்கிறேன். அதை அவளது உதட்டில் தடவினால் அவள் சில விநாடிகளில் இறந்து விடுவாள். அந்தக் குங்குமம் அவளது தலையணைக்குக் கீழே தான் இருக்கும். அதை எடுத்துக் கொண்டு வந்து விடு" என்றான்.

ஜெயசேனன் ராட்சஸன் கொடுத்த மூலிகையை வாங்கிக் கொண்டான். பல்லூகன் அவனை மறுவிநாடியே தூக்கிக் கொண்டு போய் முள்ளுகியின் அறையில் விட்டு விட்டுப் போனான். ஜெயசேனன் அந்த மூலிகையை எடுத்து அவளது உதட்டில் தடவ மனமில்லாமல் அழகியான அவளைத் தட்டி எழுப்பினான். அவள் கண் விழித்துப் பார்த்து "யார் நீ? யாருமே வர முடியாத இங்கு நீ எப்படி வந்தாய்?" என்று கேட்டாள்.

ஜெயசேனன் தன் கதையை விவரித்து "நான் நினைத்திருந்தால் உன்னைக் கொன்றிருக்கலாம். ஆனால் கொல்லவில்லை. இந்த உபகாரத்திற்கு பதிலாக உன்னிடமுள்ள குங்குமத்தைக் கொடு" என்றான்.

முள்ளுகி அவன் தன்னைக் கொல்லாமல் விட்டது கண்டு மகிழ்ந்து "அது சரி. இந்தக் குங்குமத்தைக் கொடுத்தால் நீ இதை பல்லூகனிடம் கொண்டு போய்த் தானே கொடுப்பாய். நான் அதனால் அவனுக்கு அடிமையாக வேண்டி வரும். அதனால் நீ எனக்கு உதவி செய்ய வேண்டும். நான் கொடுக்கும் மூலிகையை பல்லூகன் தூங்கும் போது அவன் உதட்டில் தடவி அவன் உயிரைப் போக்கிவிடு அவன் வைத்துள்ள குங்குமச் சிமிழை எடுத்து வந்து எனக்குக் கொடு. அப்போது உலகில் எந்த ஒரு சக்தியாலும் என்னை அடக்க முடியாது. நான் உனக்கும் எப்போதும் உதவி வருவேன்" என்றாள்.

ஜெயசேனனோ "இதை நான் செய்ய மாட்டேன். இவ்வுலகில் ஆணும் பெண்ணும் ஒருவருக்கொரு

வர் உதவி புரிந்து கொள்ள வேண்டும். நீ பல்லூகனை மணந்து கொண்டால் நீங்கள் இருவருமே சக்தி சாலிகளாகி விடுவீர்க்ள். நீ பல்லூகனை விரும்பு. அவனும் உன்னை விரும்புவான். நான் சந்திரிகாவை விரும்பி மணக்கப் போவது போல உன் திருமணமும் நடக்கட்டும்" என்றான்.

முள்ளுகியும் யோசித்து "நீ சொல்வதே சரி. நான் பல்லூகனை மணந்து கொள்கிறேன். இந்தா குங்குமம். இதை அவனிடம் என் பரிசாகக் கொடு" என்றாள்.

ஜெயசேனனும் பல்லூகனிருக்கும் இடத்தை அடைந்து நடந்ததை எல்லாம் கூறி" நீ முள்ளுகியை மணந்தால் சுகப்படுவாய் அதனால் நீங்கள் இருவருமே உலகில் சக்திசாலிகளாக விளங்குவீர்கள்" என்று விளக்கினான். முள்ளுகி குங்குமத்தைப் பரிசாக அனுப்பியது கண்டு பல்லூகன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். அவன் உடனேயே சந்தரிகாவை ஜெயசேனனிடம் ஒப்படைத்து அவர்களைக் காட்டுக்கு வெளியே கொண்டு வந்துவிட்டான்.

அங்கிருந்த அரச குமாரர்கள் நடந்ததை எல்லாம் தெரிந்து கொண்டு "பல்லூகனும் முள்ளுகியும் கொடியவர்களாயிற்றே. அவர்களைக் கொல்லாமல் நீ வந்தது பெருந் தவறு" என்று ஜெயசேனனைக் கடிந்து கொண்டார்கள்.

ஜெயசேனனோ "இது வரை அவர்கள் உலகில் யாருக்கும் எந்த விதமான கெடுதலையும் செய்யவில்லை. எனவே அவர்கள் என்ன செய்வார்களோ என்று வீண் கற்பனைகளில் மூழ்க வேண்டாம்" என்றான்.

அதுகேட்டு அரச குமாரர்கள் எதுவும் பேச முடியாமல் போயினர். சந்திரிகாவிற்கும் ஜெயசேனனுக்கும் விமரிசையாக விவாகம் நடைபெற்றது. அதற்கு புதிதாக தம்பதிகளாகி விட்ட பல்லூகனும் முள்ளுகியும் வந்து அவர்களை வாழ்த்தி உலக அமைதிக்காக எல்லா விதத்திலும் உதவுவதாக வாக்களித்து விட்டுச் சென்றார்கள்.





# மனித இயல்புகள்

வீரபுரி மன்னன் திடீரென இறந்து போகவே அவனது பதினாறு வயது மகன் சிம்மாசனத்தில் அமர்ந்தான். உலக அனுபவமே சற்றும் இல்லாத அந்த இளம் மன்னனிடம் ராஜகுரு "ஆட்சிபுரிபவன் ஒரு மனிதனிடம் எவ்வளவு மனித குணம் உள்ளது என்பதை அறிந்து கொள்ள வேண்டும். இதுபற்றி எனக்கு அவகாசம் கிடைத்த போதெல்லாம் நான் உனக்குச் சொல்கிறேன். கேட்டுக் கொள்" என்றார்.

இதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்று மன்னன் கேட்கவே ராஜகுருவும் "உன்னிப்பாக கவனித்து வந்தால் கொஞ்ச காலந்தான் பிடிக்கும்" என்றார். அதன்பின் அரண்மனையிலுள்ளவர்களும் அதிகாரிகளும் தம் அனுபவங்களை மன்னரிடம் அவ்வப்போது கூறிவர அவர் ஏற்பாடு செய்தார்.

ஒருமுறை அரசாங்க ஒற்றன் ஒருவன் வந்து மன்னனிடம் "அரசே நான் ஒரு காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தபோது காலில் முள் தைத்தது. நான் நொண்டிக் கொண்டே போகையில் ஒருவன் ஓடிவந்து "புலி வருகிறது தப்பி ஓடு" எனக் கூறிவிட்டு ஒரு மரத்தின் மீது ஏறிக் கொண்டான். நானும் ஒரு மரத்தில் ஏறிக் கொண்டேன். சற்று நேரத்திற்குப் பின் புலி அவ்வழியே போயிற்று பிறகு இருவரும் மரங்களிலிருந்து இறங்கி அவரவர் பாதையில் சென்றோம்" என்றான்.

அப்போது ராஜகுரு "ஒற்றனை எச்சரித்த மனிதனிடம் மனிதத் தன்மை நாளில் ஒரு பங்கு உள்ளது. அவன் இவனை எச்சரித்தானேயொழிய காப்பாற்ற முயலவில்லை. தன்னை காத்துக் கொள்ளத்தான் மரத்தில் ஏறிக் கொண்டான்"

- லட்சுமி குருமூர்த்தி -

என்றார்.

மற்றொரு முறை இன்னொரு. ஒற்றன் வந்து மன்னனிடம் "ஒரு ஏழை மனிதன் சாப்பிட வழியில்லாமல் ஒரு பணக்காரனின் வீட்டின் முன் மயங்கி விழுந்து விட்டான். பணக்காரன் அவனது மயக்கத்தைப் போக்கிச் சாப்பாடு போட்டு அவனைத் தன்னிடம் வேலைக்கு வைத்துக் கொண்டான். ஒருநாள் பணக்காரன் அவனை அடித்துக் கொண்டிருக்கவே அவ்வழியே போன ஒருவன் "அவனை ஏன் அடிக்கிறாய்?" என்று கேட்டான். பணக்காரனும் "இவன் பசியால் வாடியபோது சாப்பாடு போட்டு வேலை கொடுத்து என் அடிமை என்று பத்திரமும் எழுதி வாங்கிக் கொண்டிருக்கிறேன். இந்த அடிமையை என் இஷ்டம் போல நடத்துவேன்"என்றான். அந்த வழிப் போக்கன் பணக்காரனிடமிருந்து அடிமைப் பத்திரத்தை வாங்கிப் பார்த்து அதைக் கிழித்து எறிந்தான். பிறகு ஏழையிடம் "இனி நீ இவன் அடிமை இல்லை. நீ எங்கு வேண்டுமானாலும் போ எனக் கூறினான்" என்று சொன்னான்.

அப்போது ராஜகுரு "அந்த வழிப் போக்கனிடம் மனிதத் தன்மை அரைப்பங்கு உள்ளது. அந்த ஏழையை விடுவித்தானேயொழிய அவனுக்கு வேறு வழி காட்டவில்லையே" என்றார்.

ஒருநாள் அரச சபைக்கு இரு வியாபாரிகள் வந்தார்கள். அவர்கள் தம் பொருள்களுடன் செல்கையில் திருடர்கள் வழி மறித்து அவர்களிடம் இருந்ததைப் பறித்துக் கொண்டு அவர்களை கொல்ல கத்திகளை எடுத்தார்களாம். அப்போது திருடர் தலைவன் அவர்களைத் தடுத்து "இப்படிப்பட்டவர்கள் உயிருடன் இருந்தால்தான் நம் தொழில் நடக்கும்" எனக் கூறி அவர்கள் இருவருக்கும் வழிச் செலவுக்கென இரண்டு ரூபாய் கொடுத்து அனுப்பினானாம்.



இதைக் கேட்ட ராஜகுரு "திருடர் தலைவனிடம் முக்கால் பங்கு மனிதத் தன்மை உள்ளது. அவனது நடத்தை அவனை முழு மனிதனாக்கி விடவில்லை" என்றார்.

ஒருநாள் ஒரு அரசாங்க வீரன் இருவரை மன்னன் முன் கொண்டு வந்து நிறுத்தினான். அவர்களில் ஒருவன் பணக்காரன் மற்றவன் ஏழை. வீரன் மன்னனிடம் "அரசே! இந்த ஏழையை இப் பணக்காரன் நீரில் தள்ளி அவனும் அதில் குதித் ததை நான் கண்டேன். நான் கரைக்கு ஓடினேன் அதற்குள் இவர்கள் கரைக்கு வந்துவிட்டார்கள்" என்றான்.

மன்னன் பணக்காரனிடம் "ஏன் இந்த ஏழையை நீரில் தள்ளினாய்?" என்று கேட்க அவனும் கூறலானான்: "அரசே! இவன் என்பக்கத்து வீட்டுக் காரன். இவனது நிலத்தை ஆக்கிர மித்தேன். இது அநியாயம் என்று இவன் எல்லோரிடமும் கூறவே நான் கோபம் கொண்டு இவன் குடிசைக்குத் தீ வைத்தேன். அது பற்றிய விசாரணையில் இவனது அஜாக்கிரதையால் தான் குடிசை எறிந்தது என அதிகாரிகளைச் சொல்ல வைத்தேன். இன்று குளக் கரையில் என்னைக் கண்ட இவன் "என்னை அடியோடு நாசமாக்கி விட்டாயே" என்று கத்த நான் கோபம் கொண்டு இவனைக் குளத்தில் தள்ளினேன். இவன் என்னைப் பலமாகப் பிடித்துக் கொள்ள இவ னோடு சேர்த்து நானும் விழுந்தேன். நான் நீந்தத் தெரியாமல் தத்தளிக்கவே இவனே என்னைக் காப்பாற்றிக் கரை சேர்த்தான்."

"ராஜகுரு அப்பணக்காரனை ஏழைக்கு நஷ்ட ஈடாக பெருந்தொகை கொடுக்கச் செய்து மன்னனிடம் "பார்த்தாயா! அந்த ஏழை தனக்கு எல்லாவிதத்திலும் கெடுதல் செய்த பணக்காரனை உயிர்போகும் தரு ணத்தில் காப்பாற்றி அவன் மனதை மாற்றி விட்டான். ஒருமனிதனை நல்லவனாக மாற்றுபவனே முழு மனிதன்" என்றார்.

ராஜகுரு இப்படிக் கூறிய அறிவு ரையை ஏற்று மனிதத் தன்மை என்பது என்ன என்று புரிந்து கொண்டு நாட்டை நன்கு ஆண்டு வந்தான்.



# இயற்கை விநோதங்கள்

## அபூர்வக்கிளி

கிளிகளில் 'ஹீராமன்தோதா' என்ற கிளி வகை மிகவும் அபூர்வமானது. இவற்றின் குரல் இனிமையாய் மனிதன் பேசுவது போலவே இருக்கும். முகலாய மன்னன் ஹூமாயூன் காக்ரான் கோட்டையை பகதூர்ஷாவிடமிருந்து கைப்பற்றிய போது அங்கு ஒரு தங்கக் கூண்டுள் ஒரு தங்கக் கிளியைக் கண்டான் அதை அதிசயத்துடன் பார்த்து நின்ற ஹூமாயூன் முன்னால் ரூமிகான் என்பவன் பகதூர்ஷாவைக் கொண்டு வந்து நிறுத்தவே அந்தக் கிளி ரூமிகானைப் பார்த்து 'துரோகி துரோகி' எனக் கூவியதாம். பறவை நிபுணர் டாக்டர் சலீம் அலி இவ்வகைக் கிளிகள் மிக விரைவில் மொழியைக் கற்கின்றன என்கிறார். இவ்வகைக் கிளிகள் மத்தியப் பிரதேசத்தில் காணக் கிடைக்கின்றன. ஆனால் இவை அங்குள்ள வேடர்களால் பிடிக்கப்படுவதால் அழிந்து கொண்டே வருகின்றன.




## பொன்நிறக் குரங்கு

மேற்கு வங்காளத்தில் ஜல்பாய்குரியருகே ஓல்கா கிராமத்தில் இருபது ஆண்டுகளுக்குப் பின் பொன்நிறக் குரங்கு ஒன்று தென்பட்டதாம். அதைப் பார்த்த பக்ஸாடைகர் திட்டத்தின் கீழ் பணிபுரிபவர்கள் அதனை பிடித்து அஸ்ஸாமிலுள்ள மானஸ் பிராணிகள் சரணாலயத்திற்கு அனுப்பினார்கள். இவ்வகைக் குரங்குகள் அழிந்து கொண்டே வருகின்றன.




## பட்டினிச் சாவுகள்

பிரிட்டிஷ் தீவுகளைச் சுற்றியுள்ள கடல் பகுதிகளில் 75,000 கடல் பறவைகள் பசியால் செத்து விட்டனவாம். அத்தீவுகளின் கிழக்குப் பகுதியில் மீனவர்கள் ஏராளமாக மீன்களைப் பிடித்து விடுவதால் இப்பறவைகளுக்கு உண்ண மீன்கள் கிடைப்பதில்லையாம். ஷெட்லெண்ட் தீவுப் பகுதியில் மட்டும் 50,000 பறவைகள் உணவு கிடைக்காமல் இறந்து போயினவாம். குவில்மோட், ஷான்ஸ், நியர்ஜாபில்ஸ், பபின் போன்ற பறவைகள் இப்படி இறக்க அவை குறைந்து கொண்டே போகின்றனவாம்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!










It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !





THE

ANDAMAMA

LLECTION

ARTIG1246

# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



S.G. Seshagiri



S.G. Seshagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஜூலை 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## மே மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : ரசிப்பும், சிரிப்பும் |
| இரண்டாவது போட்டோ | : ஏக்கமும் எதிர்பார்ப்பும் |
| பரிசு பெற்றவர் | : எஸ். பிச்சையம்மாள், மதுரை-9. |




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

